தின்றிடு தசநா டியதிலரு நோய்கள்
கெர்ப்பவிப் புருதி படுவிப் புருதியு
முர்பன விளாவிப் பருதியுளை மாந்தை
பக்கவாய் வண்ட வாய்வுடன் வாதம்
துக்கமுல் வாதந் துடைவாதப் பிடிசூலை
சேர்பக்க சூலை சேர்வாத சூலை
யோனி சூலை யொடுநாபி சூலை
சீரிப் புழுதிமிர்ப் புழுவுதிர் வாய்வு
வாரியி னறுபது வாய்வுடன் சிரங்கும்
இப்படி ரணத்தா லெடுத்தபுண் சூலைக
ளப்படி யறுமது மாவவி டதமாம்
செம்பொற் றிருவுரை தென்கயி லைப்பொதி
கும்பக் குறுமுனி கூறுமிவ் வகையே.

**ரசச் சிந்தூரம்.**

ஏறிரு பதுநா லினியிரு வோரு
மாறு றிருபது மினியுடன் எரிபொடி
மாவுட னரையரை வளைகட வதிலுளி
லடையிடு எரியையா ரிசைகடி திரிதீயொடு
நீர்பட வுடையடை பரணித னுள்ளறு
பானங் களிலிடப் பார்தனின் மானிடர்க்
கறுபதி நால்தனு வங்குள சுரமறும்
மண்டலங் கொண்டிட மகத்தான ரோகம்போம்
கண்டாற் சிவக்குங் கமலம்போ லாமுகம்
தந்த மிறுகுந் தனுவுஞ் சிவப்பேறும்
விந்தூ று மோகம் மிகுந்திடும்ரசச்
சிந்தூர மாமுனி செப்பினர் சீடர்க்கே

**காந்த சிந்தூரம்.**

சீரினி தேவி செயநாத நாற்பலம்
பாரது சுத்தி பண்பாகப் பாம்பின்றோல்

நீர்விட்டுச் சாமம்நா லாட்டிதட்டிரவி
ஆடித் துலர்த்தி வைப்பாய் சட்டியில்
மண்மூடி மண்டா னதிச்செய்து மாட்டு
குழிப் புடன்தண்டே ரெழுமுழந் தாணிட்
டெருப்பொடி போட்டுமிப் போட்டனல் பூட்டி
ஆடாதோ டைச்சாற் றிணிற்கையா னீரடி
ஆழு வகையி லரைப்பதொவ் வோர்சாமம்
தாமக் குறத்திவேர் சட்டியுள் தட்டிடு
அரைத்திடு வில்லை யதுரவி காய்ந்தபின்
விரைத்தவத னுள்வைத்து மூடிச் சீலைசெய்
ஓதிய முன்புட மூட்டி யதையெடு
தாதலர் போலாந் தலிச்சிவக் காவிடில்
அப்படி முன்போ லரைத்துப் புடமிடு
செப்பம தாகச் சிவந்துசிந் தூரமாம்
இட்டிடு வெண்குழ லிதனுக் கநுபானம்
விட்ட திரிகடு வெதுப்பிப் பொடி வெரு
கடிலோக சிந்தூரங் காணூர் பணங்காந்த
மிடவந்த சிந்தூர மிட்டோர் பணமதில்
மதுவிற் குழப்பிக்கொள் மண்டல மிரண்டுகால்
வதிசோகை யிளை காமாலை யெலிகடி
வரண்மாலை யூதுகா மாலைநீர் காமாலை
அரிவைசேர் பாண்டு குலச்சல திமிர்வாய்வு
ஈரேட்டு குன்ம மிருபத்தோர் வாய்வு
ஆரோசி கிராணி யதிசார மீராறு
பார்சோரும் ரோகம் பனிரண்டு மேயறும்
சோரசி லேத்மசோ பங்தொண் ணூற் றுறுபோம்
காந்தமும் லோகங் கடுஞ்சிவப் பிற்பணஞ்
சாந்தங் கொடிவேலி சமூலச் சூரணம்

வெருகடி தேனின் விரவி யிரண்டுகோல்
உரமுடன் கொள்ள வென்பது வாதம்
அஸ்தியி லுண்டான வியாதியுஞ் சோகையும்
பித்த கோபநூற் றிருபத் தெட்டறும்
அங்கதி லுண்ணே யறுங்காந்த யோகமும்
வங்கசிந் தூர மறைபல வமையொன்று
பண்பாண் டரையா வாரைதயி லத்தினிற்
குணமாய்க் குழப்பிக் கொள்ளவு மிரண்டுகோல்
நீரினி லோடு நெடுநா ணைக்களும்
வேரோடு கெட்டு வினைக ளொளித்திடும்
வேந்தன் பொதிய விமலன் மகாமுனி
காந்தசிந் தூரங் கவிஞர்க் குரைத்ததே.

வங்க சிந்தூரம்.

சுத்தித்த காரீயம் பலமூன்று பூநாக
மத்திடை யீர்பங் கவையிட் டோர்பங்கு
சிறுகச் சிறுக வுருக்கிய முகத்திற்
கொடுக்கவயச் சட்டுவங் கொண்டு கிண்டியே
துச்சாவாரை வட்டத் துத்தியிவை யிரண்டும்
பச்சைவே ராகப் பலமிரண்டு தட்டியே
ஈயத்தில் மாட்டி யிடுமுன்னோர் பங்குப்பு
மாயத்தில் மாட்டி வறுக்கச் சிவப்பேறும்
இடவா வரையி லெரித்திடு நாற்சாமம்
இடவ முளி காணுதிக ளேசெய்து
அடைவே யதனு ளதனுக் கநுபானம்
கொடுமா துளம்பூ குணமாஞ்செந் தூரத்தில்
பணமரை சீனி வெருகடி நற்சீந்தி
குணமாய்ப் புடமிட்டுக் கூட்டும் பணவெடை
கொடுவெண்ணெய்புன்னைகள்விடைகூட்டிக்கொள

மாவிரு காயச மண்டலம் வெட்டைபோம்
ஈரொன் பதுமூத் திரகிருச் சமறும்
பாற்கல்துன் மாங்கிஷ மடைப்பு பதினெட்டும்
சேருஷ்ண ரோகி சுரமுந் நூற்றிரு
பத்துநூற் றெட்டு சுரம்பித்த கோபமும்
இரத்தசலக் கழிச்சலிரு பதுமதி லுண்டான
வழலைதா கங்களு மமுதமுள் ளுருக்கி
மூட்டு முருக்கெலும் புருக்கி பணிரண்டு
மூகமெரிப் போடு காலெரிப் புடன்கை
எரிப்புசேர் மஞ்சள்தா னீராறு சுக்கிலம்
பிரமியமீ ரொன்பதும் பாரினி லிவைதான்
பறந்தே யொழிந்திடுந் திரிகடிற் சீரி
காய மிந்துப் போமஞ் சமனாகச்
சரிசேர வறுத்துப் பொடிதான் வெருகடி
சிந்தூரம் வங்க மரைகாந்த மோர்பணம்
சிந்து மதுவிற் றசநா ளிடத்தான
ஆறுகிராணி யதிசாரம் பன்னிரண்டு
மாறும் வயிற்றுக் கடுப்பு வகைபத்து
வயிற்பிள்ளை பெற்று மலநீர்சிக் கிராணிபோம்
வயிற்பணந் தானரை வங்கசிந் தூரம்
காந்தமும் லோகமுங் கல்வீர பணவெடை
போந்தத் திரிகடுப் பொடியோர் வெருகடி
பாலினிற் குழைத்திரு பதினா ளிரண்டுகால்
கால்தான் கொளநீர்க் காமாலை விஷபாகம்
பயித்தியம் பாண்டு சோகைமகா சோகை
சயித்திய வரட்கா மாலைவிஷ வீக்க
மேலிளைப் புப்பிச மிருமலெலிகடி
மாவிலை மந்தார காசமுளை மாந்தை

காசச் சுவாசங் காசச் சயரோ
மேதச்சுர மாந்தை திருப்பிவையெலாம்
கால்மேல் வீக்கங் கதறி யொளித்திடும்
மேல்விஷ பாகங்கள் மீளா தோடிடும்
தங்கப் பொதிய வரைவாழ் மகாமுனி
வங்கச் சிந்தூர வகைதா னுரைத்ததே. ()

அயச் சிந்தூரம்.

கருந்தா தறப்பொடி காணம் பலமினி
கருங்கெந்தி காந்தந் தானொன் றேகால்
சிவப்புக் கழஞ்சொன் றோஞ்சு சுத்திசெய்
தவப்பு மறப்பொடி சம்பீரச் சார்சுத்தி
இலைச்சார் மணிச்சாறு மறத்தி யினிற்சுத்தி
உலகாந்தங் கோட்சா ரவித்திடச் சுத்தி
வட்புறு நாற்ற மாறம் புடச்சுத்தி
சிவப்புமார்ச் சாலநீர் செம்பீரச் சார்சுத்தி
கூட்டி யிடவைந்துங் குறநீ ரொருசாமம்
ஆட்டியா வின்மோற் சாறொரு சாமம்
† தூதுளை நீரிற் றுனரை யோர்சாமம்
மாதுளைப் பழச்சாறு மத்திப்ப தோர்சாமம்
முருக்கிலை நீரில் மூட்டிடோர் சாமம்
பெருக்க வழித்தொரு வட்டாய்ப் பிடித்திட்டு
ரவியி லுலர்த்தி நாவத்தோல் தானிடித்து
நற்புதுச் சட்டியுள் ளிட்டிள வில்லைவை
மூடிமண் செய்தெரி முற்றிடு மூன்றுநாள்
வாடாமற் றீயெரி மாட்டோர் விறகினல்
ஆறி யெடுத்ததிற் குறநீர் விட்டு
மீறவோர் சாம மரைத்துப் பிடிவில்லை
பதிவா யுலர்த்திப் பாற்குறத் தியன்னம்

† தூதிலை என்பது எட்டுப்பிரதி.

புதியவோர் சட்டியிட் டேவில்லை யுள்வைத்துச்
சிலைமூன் றுசெய்து திறமாய்க் குறிப்புடம்
கால்முழ மட்டுங் கடிய வெருமுட்டி
ஆறி யெடுத்துமுன் னப்படி யேழ்புடம்
நீறிடுஞ் செங்கழு நீருப்புப் போல்நிறஞ்
சிந்துர மாகுந் திரமா யெடுத்தடை
பந்தா ரிதற்கநு பானத்தில் மண்டலம்
பகரக் கேள்திரி கடுகு வெதுப்பிப்
பொடியோர் வெருகடி பெரிய சிந்தூரம்
தோஷம் பொடிபடு மீரெண் சூலைபோம்
இருபண வெடைசிந் தூரம தெனுமே.

ரசச்சிந்தூரம் திராவகத்தில்.

† வைப்பினிற் பாத ரசமொரு சேரொடு
‡ உப்பு நறும்புவோ ரிருபது முன்சிலை
ஒன்று தாரஞ் சேரிதி * லிரண்டெடை
நிலையுள சங்க நீரிற் பிசறியே
கடைமதி லரையிட் டெரியிடு சாமம்நால்
அடமதி லேற வெடுத்திடு சர்க்கரை
தேனி விடமா வாபெருஞ் சூலை
சுரந்தோஷஞ் சன்னி சுக்குக் கஷாயம்
இஞ்சிச் சாறுடன் மிக்க முலைப்பால்
வெள்ளுள்ளி யின்னீர் மிளகுக் கஷாயம்
திரிகடு பலைநீர் தழல்சுடு நீரில்
தானநு பானம் வகையினை யறிந்து
வினைகுணந் தெரிந்து மேதினி யோர்க்கு
துகையறிந் திடநோய் துரிதம தறுமே. ()

† சிவப்பினிற் பாத ரச-என்பது எட்டுப் பிரதி.
‡ உவர்ப்பூ. * லிரண்டரை, என்பது எட்டுப் பிரதி.

## செயரசம்.

தங்கம் பலமொன்று தாரம் எண்பலம்
பொங்கலீ ரெண்பலம் பூமான் சிலைக்காசு
செம்பருத் திச்சார் சேர்த்துப் பிசறியே
அம்பெருங் குப்பி யடைத்தெ ரித்திடு
தொண்ணூறு நாழிகை தோன்ற வெரிமுத்தீ
எண்ணெய் ரவியது போற்சிவப் பேறும்
சொர்ணச் சிமிழிற் றூண்டி யடைத்திடு
என்னும் வகையநு பானங் களிவிட
ஏலாதி யசுவ கெந்தாதி திராட்சாதி
பால்நெய்தேன் வெல்லம் பழநீர் வெண்ணெயும்
திரிபலை திசைமூலஞ் சேரஷ்ட சூரணம்
திரிகடு கற்பூ ராதிச் சூரணம்
செங்கருப் பஞ்சார் சீனிதாம் பூலச்சார்
அங்கதி லநுபா னங்களீ ராயிரம்
இவ்வகை யறிந்து இடவெகு நோயறும்
அவ்வகை சொலச்சூத் திரத்தடங் காநெறி
சொலவுமே தேகஞ் சொர்ணம தாகும்
பிலமுமோ யானைப் பெரும்பசி தீபனம்
வீரிய விர்த்தி வெகுகலைக் காந்தியும்
காரிய ரோமங் கருத்திடும் பல்லும்
இருக்கும் வயசோ ராயிர மிதனாற்
குருக்குணந் தேகம் வச்சிரக் குச்சுபோல்
சால வசியம் பிறந்திடும் போகம்
நரைதிரை போகும் மறலியு மணுகா
மாதவ முனியரு ளியவதி செயரச
மேவ ரவிமதி நாட்டிற் பசும்பொனே.

## அப்பிரகச் சிந்தூரம்.

காக்கை பொன் னின்குணங் காண்வகை கேண்
ஆக்கை யழியா தறிந்திதைக் கொண்டிட [மின்

தீயி லொக்குங் கருகிடுஞ் சீறிடும்
மாயும்வெண் ணீருய் மறுகிச் சலமாகும்
கிட்டம தாங்கிளர் சோறுபோ னிற்கும்
பட்டே யெரியும் பறக்கு முமிப்போல்
தீயினில் வெந்து சிவந்துகுழம் பாகும்
காய்கையிற் காக்கைபொன் காணும லோடிடும்
அறிந்திதைத் தள்ளி யனலில்வைத் தூதயில்
மறிந்துக னகம்போல் மாயாம னின்றிடில்
நல்ல திவப்பிரகம் நான்குசேர் வாங்கியே
கொல்ல னுலையிற் கொழுப்போற் காய்ச்சியே
அப்பா லதனி லமிழ்த்திடு வோர்தரம்
நீர்க்காடி குப்பைக் குடையபொன் னுங்காணி
தீரச்சு வேதனஞ் செய்திடு மூன்றுநாள்
நேராய்த் தகட்டுக்கு நேர்கூட்டிக் கோணியுள்
காடி யதனிற் பிசைந்துகொ ளந்த
நீரோ டிறுத்து வுலர்ந்தநவ நீதமும்
வெட்ட தனிற்கலைப் பாற்குட் புடமிடு
மாவிரண மூலியால் மாட்டச் சிவப்பேறும்
நரிவாய் முள்ளங்கி யிஞ்சுமப மார்க்கம்
உரியாத வாழைக் கிழங்குக் கொழிஞ்சியும்
தாழை மறக்கா ளையுடன் சாரணை
கொண்ணை யரோசிகம் நீக்கிக் கொடுப்பையும்
பாரபச் சரிசியும்யுடன பாற்காவி
கார்செறிக் கொட்டைக் கரந்தைப் பிரண்டையும்
புளிச்சா னிவையீ ரெண்மூலி பிழிந்திட்டு
வழிச்சிடு முள்வெண்ணெய் வாங்கிப் பிசறிட்டு
வரட்டியொரு கூடை மாட்டிப் புடஞ்செய்து
துரட்டியோ ரேழொன்றிற் சூட்டிடு மும்மூன்று
புடமிட் டெடுத்துப் போரலம் பட்டையில்

## தேரையர் கரிசலை - கூரு

கடமிட் டயிலமுங் காயஃநீ ரிட்டிட
ஆலம் பழத்துக் கதிக சிவப்பொடுங்
காலனு மாண்டிடக் காணுண் பணவெடை
கலைப்பா லதனிற் காணவெப்பஞ் சிந்தூரம்
மலைப்பாகும் பஞ்சா வமுதப் புடமிடச்
சயித்திய சிந்தூரந் தாணுச் சிவந்திடும்
செய்திடு நதிகட லாகுஞ்சொர் ணத்தை
இப்படிக் கைமுறை யாகச் செய்து
சிந்தூர மப்படி வெண்ணெயிற் பணவெடை
அமுதசஞ் சீவியிற் சர்க்கரையோ டாட்டி
குமுதப் படவே குழைத்திதைக் கொண்டிடில்
மேக மிருபது மேற்பித்தம் நாற்பது
போகுஞ் சராமுஷ்ண கோபமுந் நூறும்
நீரிழி வீரெட்டு நேர்ஞாணத் துட்புணும்
வேரொடு கெட்டு வினைக ளொழிந்திடும்
பணவெடை பானத்தில் மண்டலங் கொள்ள
மந்தார காச மற்றுள காசம்போம்
அண்ட இருமலெலிகடி யுப்பிசம்
கோழை சுவாசக் காசச் சுவாசமும்
ஈளை யெலிகடி யீரொன்ப துடனே
எண்பது வாத மிதிலூற் பவநோயும்
பண்பஷ்ட குன்மம் பதின்மூன் றிருவாய்வு
தீர்ந்திவை யாழியிற் சேர்ந்தே யொளித்திடும்
காந்தயச் சிந்தூரங் காணோர் பணவெடை
கரிசாலை நீரிற் குழப்பி யிரண்டுகால்
அரைமண் டலங்கொள வறுஞ்சோகை காமாலை
பாண்டு விஷபாக மூதுகா மாலையும்
உதிரடைச் சர்வகா மாலையுந் தீர்ந்திடும்

## அசுவகந்த ஏலாதித் தைலம்.

அமுக்குராக் கொம்பரக்குச் சித்தா முட்டிவேர்
குமித்த வகைபதி னெற்பலங் கூட்டியே
பதக்குநீர் விட்டு நாழியாய்க் காய்ச்சிட்
டதறவெண் ணெய்முன் னாழி யாத்தயிர் நீர்வடி
குறுணிநா னாழியிற் கூட்டும்வகை கற்கம்
சிற்ற ரத்தையுஞ் சிற்று முட்டிவேர்
கோஷ்ட மமுக்குரா சந்தனம் ரோகணி
ஊட்டு சதகுப்பை முந்திரி கைப்பழம்
கோரைக் கிழங்கு மறமஞ்சள் கூடவே
கூர்தேவ தாரமஞ் சிஷ்டி மதுரமும்
பெருங்குருவை திப்பிலி மூலம் விலாமிச்சம்
அரியநன் னாரிவே ராய்ச்சரி கூட்டி
அரைத்துக் கரைத்தெவம் பத்தி விருத்தைை
வரைத்தீ சருவாங் கழுமாட் டியுதை
மாற்றப் பெலனு முண்டாகுஞ் சுரமெலாம்
தாண்டு மிருமல் பொருமல் பித்தகாசம்
சுவாசம் போஞ்சய ரோகமெல் லாம்போம்
தாதுவர்த் தித்திடுந் தானதி வெட்டை
ஓதரு ரோகம் பறந்திடு மசுவ
கெந்தவே லாதித் தைலம் விளம்பிட
வந்த பொதிய மாமுனி வைப்பிதே
வெருகங் கிளச்சிலை வெட்டிநன் றாய்ச்சீவி
உரிதண் டிலையுட னெலாந்துவைத் திட்டுக்
காடி பதக்கற லவ்விடை கூட்டியே
ஓடப் பிசைந்து நாலொன்றாய்க் காய்ந்தபின்
கஷாய மிறுத்திடு நாழிநல் லெண்ணெயும்
படாவுமுன் னாழியாய்ப் பாலு மதில்விட்டு
வெருகங் கிழங்கு நீர்கர்க்கஞ் சிறுதேக்கு

சுக்குத் திப்பிலி சாதிக்காய் தாரமும்
கோரைக் கிழங்குட னரைத்துவெந் தப்பதத்
துட்கொடு போத முடம்பிலும் பூசி
நசிபமிடச் சீத சுரமுஞ் சன்னியும்
வசியம திட்டு வாங்கியோ டிடுமே.

### அஷ்ட சூரணம்.

காய நாலிரு சீரியிரா று கடியதிப்பிலி யெட்டொடே
ஓயும்வாத மிறுக்கி மைமதி யுப்பதை யிருமோதகம்
சுக்குதேனிரு நாளிலையுயர் சோம காயமோர் நாலையும்
மிக்கதட்டி வறுத்து வெண்மைப மாகமற்றத ளுற்கடை
மற்றவேழும்வறுத்ததைப்பொடி வஸ்திரகாயமிதிற்சரி
உற்றசீனி கலந்துபூணபி னுற்றடிப்பொடி யுள்ளிடப்
பலிதொடுத்தகடுப்பிடுப்பிரு கால்கரங்கள்கறுப்பொடே
வலிவயிற்றுள நோய்பயித்திய வாயுவென்பது மேய
றும்,வட்டெரிப்பொடுசூலைவாயுகடூருமோர்தசநாளிலே
அஷ்டசூரண மோடு தாம்பிர பற்பமோ டறுப்பானமே.

### திராக்ஷாதி சூரணம்.

முந்திரி கைக்கனி பேரீச் சங்கனி
முத்தக் காசொடி ரேணுகமும்
சந்தன நெற்பொரி காட்டெரு மைப்பால்
தனிபே லமுநற் சீரகமும்
முந்திப வெட்டிவேர் திரிகடு பலைவேர்
முட்டிவேர் கோஷ்டமு மதுரமுடன்
சிற்று முட்டிவேர் சீந்தில் சர்க்கரை
செருநி லக்குமிழ் வேருடனே
மல்லி நெருஞ்சிவேர் விலா மிச்சமர
மஞ்சளு நெய்தலின் வேருடனே

நல்ல கிராம்பொடு கஸ்தூரி மஞ்சளு
நற்குங் குமநன் மலருடனே
காணு மடவிய கச்சோ லத்துடன்
கஞ்சத் தின்வளை யம்முடனே
பூணு மிவைசரி கூட்டிப் பொடிநேர்
போடிதில் நற்சர்க் கரையுடனே
தாணிக் காயள வுண்டை யுருட்டியுட்
டாக்கி டுந்தனி மதுவிடவே
பூணு மிளைப்பு முழலையு மிருமல்
பொருமலொடு காசச் சுவாசமுடனே
குன்மமுந் தாது சயப்பிர மேகம்
கொடிய வயிற்றி லுண்ணோய் வலியும்
சோரு மரோசிய வாந்தி பயித்திய
பாண்டு சுரத்தொடு சூழ்சயமும்
நாடிடு சந்நிதி யக்க மயக்கமும்
நாற்பது பித்தமு நளிரெரிவும்
ஓடிடும் நோய்கள் திராட்சா திப்பொடி
யுண்டிட வென்றனன் மாமுநியே.

## சுகபேதிச் சூரணம்.

## வேறு.

சீரிதி லவண மோத கத்திரெறு
திப்பிலி சுக்குவிடை போக்கியே
பாரி னற்கடுவும் ரெண்டு திரிதிரியும்
நாலு மைந்துபதி லைந்தொடே
ஆக வோரவியி லுலர்த்தி தைப்பொடிய
தாக்கி வெருகடி வெநீரிட

ஏகு மூலமுளை வாயு பித்தமதி
லேயெழுந்தகொடு வாயுவுடன்
போகுமேசட சவுக்கிய மானசுக
பேதியானதெ சாதாரியே.

**அசுவகெந்த ஏலாதி சூரணம்.**

**வேறு**

கிராம்புசிறு நாகப்பூ வோடேல மிளகு
கெடியான திப்பலியும் வேர்கொம்பி னோடு
திராம சுவகெந்த முடனென் றிரண்டு
செய்நாலு மிருநாலு நான்குநா லுண்ண
எட்டெட்டு மேயுலர்த்தி யிளவறுப் பாய்பொடி
ஈரெண் சீனி யிட்டிட விதற்கு
அஷ்டகுன் மம்பீலி யுங்குத்து வாய்வு
ஆமேக வெட்டைபிர மியம்விக்கல் பாண்டு
இறைப்பு மிளைப்பொடு சயரோகம் மனவெரிவு
இடைகரங் கால்சிரம் வரட்சி யொடுவீயு
மெய்ப்பெருக வெழுத்தல் பிடுங்கிட்டோடுஞ்சிலே
விட்டோடு மேயசுவ கெந்தாதி யினிலே (த்மம்
அசுவகெந்த மமுகசஞ் சீவிகெந்தம்
மல்லியின் வெந்தயம் நெய்தலி னுடைய
கெந்தங் குமுத கஸ்தூரி கெந்தம்
செயகெந் தங்கொடி தானகிட் டமுடன்
கார்போகி யரிசி குட்டப்பாலை யரிசி
சிறுபுன்னை யரிசியோ டேவிரை யரிசி
நன்னாரி வேருத் திராக்ஷம் நெற்பொரி
கூகை நீறுமேற் கலைகொம் பாயிற்
காந்த நற்கல் கிராமை யோடு
நற்பவள மோடு மல்லிதிற மான

வயிர முள்ள திப்பிலிக ளுடனே
காசே லமுந் திரிகையி னற்கனி
பேரீச் சங்கனி வெட்டிவேர் விலாமிச்சவேர்
சந்தமுங் கிராம்பொடு கோரோ சனையும்
மிளகுவேர்க் கொம்பொடு சாதிக்காயும்
மேற்பத்திரி கூட்டி நன்றாக வைத்ததிற்
காய மிட்டுக் கொளச்சிர மதனில்
வெருகடி கொள்ளவு முடனே யாடில்
பூரில் பித்தத் தியக்க மயக்கம்
அஸ்திசுரம் வெட்டை காமாலை யும்விஞ்சி
அண்டவாய் வோடு கைகால்கண் ணெரிவு
அதிவாந்தி கிறுகிறுப் பொடுவாய்வு குன்மம்
தொண்டையுட் புண்வலி தோஷமோ ரேழும்
சுரமி வையொழிந் துடனே சுகமாம்
செயரசம் பாத ரசஞ் சிந்தூரமும்
திருவான தங்கரச சிந்தூரம் வங்கம்
நயமாமப் பிரகரச நவரத்தின பர்பம்
நவலோக நீறுட னன்றுறத் தானே
அநுபான மங்கங் கறிந்து கொளவே
அறுமிதிற் சகல நோய்க ளடிபடும்
தொனியான மாவசுவ கெந்தவே லாதிச்
சூரண மகஸ்திய மாமுனி சொன்னதே.

**வேறு.**

சுண்டைவற் றல்கறி நிம்பப் பத்திரி
சுவைக்கு மாங்கனி விளவின் கனியுமண்
சொல்லுமோ தகமு நெல்லிதா துக்கனி
தோலும் வெந்தயமோ டேழுமே.

விண்டு ரைத்தபடி யொன்று பற்றிட
வெதுப்பி யேயிள வறுப்பதாய்
மிருது வாகவிடி வடிகொ ளீதுபொடி
வெருகடி யளவு தயிரிலே
கொண்டிடப் பொருமல் பந்த மிக் கிரைவு
குமுறிடு றிடு கழிச்சலும்
கோல மூலமதி சார மோடுமெழு
கிராணி மூலமு மடாதுகை
கண்டதித் தனையும் வென்றிபுத் தியுள
பண்டிதத் தொழிலை நம்புவீர்
கருணை மாமரித முதவி கூருவரை
கைம்மருந் தெனவே செப்புமே.

## சங்கத் திராவகம்.

### வேறு.

வெடிமதி கூர்மைசாரம் விதமன பேதிநீலி
படிகிப்பூ நாதநீறு பலபொரி காரமீதோ
டதுதிரி வுபயமேக மயப்பரை காலதோர்கால்
பதவரை காலமுமேவே கமரைபோ டுடுவதாக
அடைகட மறையதாக வதில்வளை கடமுமேல்வை
இடைவழி தயிலமாக விவைவரு மேபொலாறு
கரமது நீர்கள்சேருந் தனியினி லோகதாது
உரமது நீறதாகு முபரச நீரதாகும்
மார்வலி வாயுகுன்மம் வலியறு மேகசங்க
நீரித னேதனேகன் மாதவ னோதுமாறே.

## மாந்த எண்ணெய்.

### வேறு.

திரமான வெள்ளாட்டு னீர்மோரு நாழியும்
திருவிளக் கெண்ணெய்நாழி
திருகள்ளி யோர்பலமு மிண்டங் கொழுந்துபிடி
செண்பகப் பூமதூரமும்
உரமான சாதிக்காய் பத்திரி லவங்கமும்
ஒடுபூடு வெள்ளுள்ளியும்
ஓதுமிரு சீரகம் வசம்பிலா மிச்சமும்
உறவெட்டி நன்னாரியும்
சிறுநாக முத்தமொடு பூலாக் கிழங்குடன்
சேருலவு கோரோசனை
சேர்கடுகு ரோகணிக் கோஷ்டமுட னேபச்சை
செயநாக ரஞ்சனமதாய்ச்
சரமாக வேயரைக் காசெடை யரைத்திட்டு
தணலிட்டு பதமாக்கியே
தையலே பாலெண்ணெ யுண்டிடக் கணமாந்தை
தூரணிவிட் டோடு மிதுவே.

தேரையர்கரிசலை - ௱ - முற்றிற்று.



# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 25 | மத்தங்காயரைத் தெழிற் | மத்தங்கா யாரை திராப் |
| 9 | 9 | காரமோர் | சாமமோர் |
| ,, | 13 | ,, | ,, |
| ,, | 15 | மாடி | மாகி |
| ,, | 16 | தேனி னீருடல் | தேனினிஞ்சி நீருடன் |
| 10 | 12 | காதின் | கூறு |
| ,, | 27 | வேகரி தானுற வே | வேகரி மீது வர |
| 11 | 4 | வாரதி | வாமதி |
| ,, | 6 | சீறியெண் | சிறிவெண் |
| ,, | 7 | ணேயிட | ணெயிட |
| ,, | 15 | மாற | மாரச |
| ,, | 23 | சேராம் | சோரம் |
| ,, | 26 | சோரினில் | சோரனில் |
| 12 | 21 | மதுபா டைமணஞ் | மறுபாண் டமண் |
| ,, | 28 | மிதாச | பாதரச |
| 13 | 2 | யங்குள்விட் | யங்குளவிட் |
| 14 | 19 | யரப்பொடு | யரப்பொடி |
| ,, | 24 | மாமே நயிரில் | மானே றிவை |
| 15 | 9 | ரிப்பொடி | ரிப்பொடியி |
| ,, | 10 | விட்டிட மும்பல் | விட்டிட முப்பல் |
| 16 | 11 | னிரமுட | விதமுட |
| ,, | 15 | சரிகினுள் | சருகினுள் |
| ,, | 16 | தொந்தநா லேற்றிடு | தொந்தனு றேற்றிடு |
| 17 | 13 | மூடியிற் | மூடியீர் |
| ,, | 14 | கணிவித்தின் | கனிவித்தின் |
| ,, | 17 | ஆங்கூர | ஆங்குற |
| 18 | 5 | முண்டாங்கல் | முண்டாமநல் |
| ,, | 10 | சுட்டிபல | சுட்டுபல |
| ,, | 11 | பத்துசேர் | பத்திசேர் |

| | | | |
|---|---|---|---|
| 19 | 16 | கிரங்களுஞ் | நிரங்களுஞ் |
| ,, | 18 | வில்லை செய்தழ | வில்லைசெய் நிழலி |
| ,, | 22 | லைசூ | சூலை |
| ,, | ,, | விரிசனிட | விரியனிட |
| ,, | 24 | புடையுநற் | புடையநற் |
| ,, | 26 | டிடும்படைகொளற்ப | டிடும்படி கொள்பற்ப |
| 20 | 2 | நீரதால் | நீரதாம் |
| 21 | 4 | புளயப்பரணி | புளியம்பரணி |
| 22 | 2 | பாளை யண்ட | பால் அண்ட |
| ,, | 3 | தரமூர | தரமூத |
| ,, | ,, | பீரச் | பிரச் |
| ,, | 22 | தற்பன | துற்பன |
| ,, | 26 | நீறிறப் | நீரிற் |
| 23 | 2 | சவுக்கினைந் | சவுக்கினைத் |
| ,, | 4 | வெண்கத்தம் | வெண்தந்தம் |
| ,, | 5 | சுன்னங்கள் | சுன்னங்கேள் |
| ,, | 6 | னங்களும் | ணங்களும் |
| ,, | 7 | தடப்படு | திடப்படு |
| ,, | 10 | பீரா | பீரா |
| ,, | 16 | சேரச் | சேரைச் |
| ,, | 20 | நாபியும் | நாபிரசஞ் |
| 24 | 30 | மனையினுள் | மணலினுள் |
| 25 | 3 | மணம்புடம் | மணற்புடம் |
| ,, | 19 | காய்ந்த | காய்ந்தால் |
| ,, | 31 | சொன்ன | சொர்ன |
| 26 | 11 | கனலிட்டுத் | கண்விட்டுத் |
| ,, | 13 | சாரமொன்றரை | சாரச மொன்றரை |
| ,, | 22 | போட்டண | போட்டண்ட |
| ,, | 28 | லளியநு | வழியநு |
| 27 | 12 | உருக்கிடும் போது | உருக்கிரும் பொடுரவி |
| ,, | 15 | வேப்பண்ட | வெப்பண்ட |
| ,, | 28 | வாரசுரா | வாரதா |

| | | | |
|---|---|---|---|
| 28 | 3 | நூற்பத்து | நூறுபத்து |
| ,, | 5 | கார்காரி | காரிசாரி |
| ,, | 26 | வரைகளைக் | வரைவளைக் |
| 29 | 5 | கடமதில் | கடமரை |
| ,, | 8 | பழத்தே | பளபளத்தே |
| 30 | 12 | மூத்திடு முப்பது | மூத்திப மும்முப்பது |
| 32 | 5 | மடையணி யிரண்டரை] | மடைய ணிரண்டரை |
| ,, | 10 | துர்க்காற்றே | துடக்கற்றே |
| 33 | 17 | மனகல்போ | மலைகள்போ |
| ,, | 28 | இருசமாள | வாளரி |
| 34 | 9 | நூறு | நாறு |
| ,, | 24 | கங்கொடுத்திடுசெயம்] | கஞ்செயச் செயமாமே |
| 35 | 2 | சலமேக | சகலமேக |
| ,, | 5 | சுத்திதுசெய்வன்னி[ | சுத்திசெய் வன்னி |
| ,, | 14 | போட்டிரவி | பொடிரவி |
| ,, | ,, | குடிரசம்நா | பொடிரசம்நா |
| ,, | 24 | காட்டி | கூட்டி |
| 36 | 3 | தாமதச் | தாமச் |
| ,, | 6 | தேன்ற | தோன்ற |
| ,, | 19 | ளமுதநீர் | ளிளநீர் |
| ,, | 21 | முப்பாலிஞ் | முலைப்பாலிஞ் |
| 37 | 2 | வாழைப் | வாளம் |
| ,, | 10 | மக்குச் | சுக்குச் |
| ,, | ,, | கடுமேல் வெண் முள்ளு | கடுவேலம் வாளுளி |
| ,, | 21 | கொதியரு நீருநீர் | கொதி யருநீர் |
| 38 | 3 | பேயப்புட லீராணி | பேய்ப்புடல் ரோகணி |
| ,, | 4 | தோய்தி கையிள | தோய்திக் கையானீ |
| ,, | 26 | ரோம சத்துளி | தோமஞ் சித்துளி |
| 39 | 18 | ஈரஞ்சுர | பிரளுஞ்சுர |
| 40 | 11 | கெந்தளிக் | கொந்தளிக் |

| | | | |
|---|---|---|---|
| 40 | 26 | கற்ற தவன்பரி யொன்றியோ ரிருநால் | சுத்தத் தவளம் பரியொன் றினியீரெண்பல |
| ,, | 28 | வருத்த கஞ்சால் | வருத்து கருகாமல் |
| ,, | 29 | யேசாமங் | யீர் சாமம் |
| 41 | 3 | உரியவமுரிநீ | உரிய வமுதநீ |
| ,, | 7 | சுங்கங் | அங்கங் |
| ,, | 9 | பரவெதுப் | சுரவெதுப் |
| ,, | 24 | யரைத்த | யரைத்தப்பி |
| ,, | 25 | சுடுவதன் பாலி | சுவேதனம் பாலிற் |
| 42 | 2 | மருத்துவச் | வருத்துவச் |
| ,, | ,, | லரைத்துநெட் டடபகத் | னயமா யரைத்துத் |
| ,, | 11 | மாகுறு | மாகுஞ் |
| ,, | 17 | கரிவெடி பருகி | பரிவெடி படிகி |
| ,, | 18 | வேம்பூ | பலம்பூ |
| ,, | 23 | சத்தத்திநீர் | சுத்தத்நீர் |
| ,, | 29 | வளைநவ | வளைகத் |
| 43 | 2 | பிணைவியற் | பிட்டவியற் |
| ,, | 3 | பொடியொரு | பொடிவெறு |
| ,, | 24 | வுன்னித | வுள்ளி |
| 44 | 4 | பொரியக | பொரியச |
| ,, | 6 | முந்திய | முத்திய |
| 45 | 2 | டியதிலறு | ளதிலறு |
| ,, | 9 | சீரிப் | கீரிப் |
| ,, | 18 | வதிலுளி | மதிலுளி |
| 46 | 3 | ஆடித் துலர்த்தி | ஆம துலர்த்தி |
| ,, | 5 | தண்டே ரெழு | தண்டோ ரொரு |
| ,, | 9 | சட்டியுள் தட்டிடு | சட்டியு ளிட்டு |
| ,, | 26 | சோரும் | சோம |
| 47 | 6 | யோகமும் | லோகமும் |
| ,, | 10 | நீரினி லோடு | நீரிழி வோடு |

| | | | |
|---|---|---|---|
| 47 | 29 | புன்னைகள் | புன்னையள |
| 48 | 22 | கல்வீர | கலவீர் |
| 49 | 10 | கருங்கெந்தி | தருங்கெந் திட |
| ,, | 13 | யினியிற் | யினி |
| ,, | 15 | மாறம் | மாப்பாற் |
| 50 | 3 | குறிப்புடம் | குளிப்புடம் |
| ,, | 6 | நீருப்புப் | நீர்ப்பூப் |
| 51 | 12 | பழநீர் | பனிநீர் |
| ,, | 24 | குருக்குணந் | குறிகுணந் |
| 52 | 2 | தீயி லொக்குங் | தீயில் வெடிக்குங் |
| ,, | 12 | அப்பா | ஆப்பா |
| ,, | 19 | மாவிரணை | மாவீரெண் |
| ,, | 24 | யுடன பாற்காளி | பாயுட னற்காளி |
| ,, | 27 | முள் | முன் |
| ,, | 29 | ரேழொன்றிற் | ரொவ்வொன்றிற் |
| 53 | 11 | சீவியிற் | சீவியின் |
| ,, | 15 | ஞாணத் | ஞாளத் |
| 54 | 21 | மேலுறக் கட்டிட | மேலுறத் தகடிட் |
| 55 | 4 | மருந்திடும் | மருந்தீடும் |
| 55 | 17 | செவ்வாய்ப் | செவ்வையாய்ப் |
| 56 | 3 | கங்கங் | தங்கங் |
| 57 | 22 | வெகுர்ந்திடும் | வெகுவிர்த்தி |
| 59 | 11 | நீரிழை | நீரினை |
| ,, | 16 | விண்ணீரில் புகட்டி | வின்னீரில் புஷ்டி |
| 60 | 16 | சுத்தம் பனமும் | சுகதம் பனமாம் |
| ,, | 19 | துத் துவொடும் | துற் றதுவோடு |
| ,, | 25 | பலசிங் | பாலசிங் |
| 61 | 2 | யுளஷூசி தான்கவ்வும் | [ழூசிதான் கவ்வும் |
| ,, | 5 | சேர்த் திடு | சோதித் திடு |
| ,, | 9 | தா ை ர | தானரை |
| ,, | 13 | சுட்டிடப் | இட்டிடப் |

| | | | |
|---|---|---|---|
| 61 | 27 | துருக்கப் | துண்ணப் |
| 62 | 22 | கால | காய |
| ,, | 26 | கட்டில் | கட்டி |
| ,, | 28 | போலச்சங் | பாலசங் |
| 63 | 6 | நாட்ட | நாட்டவ் |
| ,, | 10 | நாள்வைத் | நாளம்வைத் |
| ,, | 18 | பேயபுக் | பேயபூக் |
| ,, | 27 | சிர் | சீர் |
| 64 | 7 | மாதிரம் | மாசுரம் |
| 65 | 4 | பேறுங் | பெருங் |
| ,, | 5 | மத்திக்குங் | மத்திக் |
| 66 | 2 | மான்றவீ | மாலைவீ |
| ,, | 24 | மூத்திரம் | மித்திரம் |
| ,, | 28 | மடித்ததி ராக் கெட்டுக் | மடித்ததிற் கெட்டுக் |
| 68 | 7 | நாளதில் | நாளத்தில் |
| ,, | 12 | கொருபரி | கொன்று |
| ,, | 14 | இடைபத்தி | இடைபத்த |
| 70 | 20 | தண்ணீர் | கொண்ணீர் |
| ,, | 22 | சுருக்கொடு | சுருக்கொரு |
| 72 | 15 | பருத்தியாம் | பருத்தியாம்பூ |
| ,, | 21 | வக்காவிடில் | சிவக்காவிடில் |
| 74 | 27 | மன் றுஞ்சாது | யின் பயன் றுஞ்சாது |
| 75 | 20 | வாட்டூ | வாட்டு |
| 76 | 10 | ரவியநான் | ரவியதால் |
| 78 | 5 | நாலதின் மாட்சி | நாகத் திடை மாட்சி |
| ,, | 8 | சீலை | சிலை |
| ,, | 9 | நரம் | நரும் |
| ,, | 11 | ரெண்ணுசி | ரேழுசி |

ஸ்ரீ சுப்ரமணியர்

அகஸ்தியருக்கு உபதேசஞ் செய்த

# கல் நண்டு சூத்திரம்.



உற்றதொரு சமுத்திரத்தி லேபிறந்த
உசிதமென்ற கல்நண்டா மதுசெய் செய்கை
கற்றவர்க ளறிவார்கள் அல்லால் வேறே
கசடருக்கோ வொருபோதுந் தெரியா தப்பா
குற்றமற்றோர் தெரிந்தெடுத்துச் செய்து கொள்வார்
கூறுகின்றேன் நன்றாக நீயுங் கேளு
சுத்தமாம் பொரிக்காரம் விராகன் ரெண்டில்
சூட்சமுடன் நல்லஜலம் படிதான் வாரே. 1

வாரப்பா எட்டொன்றாய்க் காய்ச்சி வற்றி
வண்மையாய்க்கல் நண்டுகுன்றி யளவுரைத்து
நேரப்பா அக்கஷாயத் திற்கரைத்து
நிலையாகக் கொடுக்கநீ ரடைப்புப் பின்னும்
பாரப்பா வென்சொல்வேன் கல்ல டைப்பன்
படுத்தாது படுத்துநீர்ச் சுருக்கும் குத்தும்
ஆரப்பா பொறுக்கமுடி யாதே யென்று
அலைந்தழுமத் துன்மாங்கி சடைப்பும் போமே. 2

போமேதான் கிரிச்சனங்கள் பதினெட் டும்பின்
பொறுக்காத நீர்த்துன்ப மகன்று போகும்
பாமேவு தேனதில்கல் நண்டு தன்னைப்
பண்பினந்தி சந்திகுன்றி யளவு ரைத்துத்

தாமேதான் மத்தித்து முப்போ துண்ணத்
தட்டழியும் பதின்மூன்று ஜன்னி யுந்தான்
நாமேதா னெனும்வாத மெண்ப துக்கு
நலமாமுக் கரணைச்சா ரணையின் வேரே. 3

வேரான மாவிலிங்கம் பட்டை சேர்த்தக்
கஷாயமதில் கல்கண்டு குன்றி கூட்டி
ஆரோடும் பேசாமல் மூன்று நாளும்
அடைவுடனே அந்திசந்தி கொள்ளும் போது
ஊரோடு பகைத்தவன்போற் பறந்தே யோடி
ஒழியுமடா வாதமெண் பதுவு மன்றே
நேராமிச் சூத்திரத்தை யறியொ ணாத
நீசனிதன் மகிமைதனைக் காணான் தானே. 4

தானேதான் போகுதடா வாத மெல்லாம்
தவறுதலே பண்ணிவைக்கும் குதிரை வாதம்
ஊனேதான் வாட்டிவைக்கும் யானை வாதம்
உரவாதம் உற்பனங்கள் சொல்லும் வாயில்
கோனேதான் என்றிருக்கும் நாடிப் பூட்டில்
கோணிமேய முகத்திசிவு ஜன்னி வாதம்
நானேதான் என்றிருக்கும் பிடரி வாதம்
நரம்பிசிவு வீச்சதுவும் போகுந் தானே. 5

போச்சுதடா வுடல்வருத்த மதுவு மப்பா
பொல்லாத வாயுவெல்லாம் எங்கே போச்சு
காய்ச்சலென்ற சுரங்களறு பத்து நான்கும்
கஷாயமாம் சீரகத்தில் கல்கண் டூட்டிப்
பாச்சறுமூந் நாளந்தி சந்தி கொள்ள
மாண்டுதடா சுரங்களெல்லாந் தீர்ந்திப் பாரில்
எச்சடையா இசைவளர்க்கு மைந்தா நீயும்
இனிதாக இதனைமனங் கொள்வாய் தானே. 6

தானேதான் எலிச்செவியா மிலையரைத்துத்
தப்பாமற் கொட்டைப்பாக் களவில் மைந்தா
ஏனேதா னென்னுமல் கல்நண் டைத்தான்
இயல்பாகக் குன்றியள வுரைத் தருந்த
ஊனேதான் தினும்வாத பித்த மையம்
உற்பனமாம் சீரிழிவோ டெல்லாந் தீரும்
தேனேதான் மொழியுடைய பெண்க ளுக்குத்
தினமூன்நா ளருந்தகர்ப்ப வாய்வு போச்சே. 7

போச்சுதடா குட்டமென்ற பதினெட் டுந்தான்
புகழ்பெரிய சிவன்வேம்பு தைலந் தன்னில்
வாய்ச்சுதடா வென்றுகா சளவி லப்பா
மகத்தான கல்நண்டு குன்றி சேர்த்து
ஏய்ச்சுதடா வென்றுநீ யிருந்தி டாமல்
இப்போதே யிரண்டுமொன்றாய் மத்தித் தேதான்
கீழ்ச்சுதடா மண்டலங்கால் கொள்ளும் போதே
கெட்டுதடா பதினெட்டுக் குட்டம் பாரே. 8

பாரப்பா பாடவரைச் சாற்றி லேதான்
பண்பான கல்நண்டு குன்றிசேர்த்துச்
சூரப்பா வென்றுமூன் று நாள்கொ டுக்கச்
சுத்தமுடன் தழுதணையாம் படைகள் முற்றும்
தீரப்பா வென்றுதுர் நீர்க ளெல்லாம்
திடம்பெரிய பெருவயிறு சேரப் போகும்
ஊரப்பா இல்லாதே யாறு காதம்
உத்தமனே யோடியது போச்சு போச்சு. 9

போச்சப்பா விஷமென்ற தெல்லாத் துக்கும்
புகழ்பெரிய தேள்மிட்டி யிலையின் சாற்றில்
வாச்சுதுகல் நண்டுகுன்றி யளவு ரைத்து
வகையாகச் சேர்த்துநீ கொள்ளும் போது

மூச்சுறுநீர் சூழுலகில் மகனே கேளாய்
முதிர்சுகமே பெருகுநெறி யதுவந்தெய்தல்
ஆச்சுதடா சொல்லுமகா விஷங்க ளெல்லாம்
அறுநூறு காதவழிக் கப்பால் போமே. 10

போமேதான் சீரிப்பூ டதனின் சாற்றில்
புகழான கல்நண்டு தன்னைச் சேர்த்து
வேமேதான் சகலவிஷ மெல்லாந் தாக்கும்
விரும்பியே கொடுக்கவெருண் டோடிப் போகும்
நாமேதான் சொல்வோமுத் தமதா ளிப்பேர்
நல்லஇலைச் சாற்றினில்கல் நண்டு வைத்து
ஆமேதான் என்றுசொல்லி கொடுக்கும் போது
அகன்றுபோம் பேய்நரி நாய் விஷந்தானே. 11

விஷமென்ற உன்மத்தம் பைத்தியம் போக
விளங்குதே சிச்சாற்றில் கல்நண் டூட்டி
நிசமென்று பன்னிரண்டு நாட்கொ டுக்க
நில்லாம லோடும்பைத் தியமுன் மத்தம்
நசலான குமரகண்டன் பரம கண்டன்
நாடாது போகவேயுத் தமதா ளித்தான்
இசலாமல் கொண்டுவந்து சார்பி ழிந்து
இன்பமுடன் கல்நண்டு தன்னைச் சேரே. 12

சேர்த்தபின்பு உழுந்தளவு எடுத்துக் கொண்டு
செய்யடா இரண்டுகண்ணில் கலிக்கம் போடு
பார்த்திருக்க வோடுமடா பதினெண் ணோயும்
பறந்துதடா விண்ணதனிற் பாரு பாரு
நாற்றிசைசொல் நந்தியா வட்டச் சாற்றில்
நலமான கல்நண்டு அதுவும் சேர்த்து
தீர்த்துமே யிரண்டுகண்ணி லேயு மப்பா
திடமாக எள்ளளவு எட்டு நாளே. 13

எட்டுநா ளிட்டவுடன் நேத்ர ரோகம்
எளிதாகப் போச்சுதடா தொண்ணூற் றாறும்
முட்டாமல் முருங்கைவிரை தைலந் தன்னில்
முழிப்பான கல்நண்டு சேர்த்த ரைத்துத்
தட்டாதே மத்தித்துக் கண்ணிற் போடத்
தட்டாமற் போச்சுதுகண் குருடு தானே
நட்டாதே பிள்ளையில்லா மலடி கட்கு
நற்பசும்பா லொடுகல்நண் டுரைத்துக் கூட்டே. 14

கூட்டியந்த மருந்தையிரு பதுநாட் கொள்ளக்
குறிப்பாகப் புத்திரபாக் கியமுண் டாகும்
தீட்டியவேர் ஜாதிக்காய்ப் பொடியு மப்பா
தீர்க்கமுடன் கல்நண்டு ரெண்டு மொன்றாய்த்
தாட்டியமாய்க் கூட்டியுண்ணு மூன்று நாள்தான்
தப்பாதே போகம்தம் பித்துக் கொள்ளும்
சேட்டமதாய்த் தேசிச்சா றதனிற் கொள்ளச்
சீக்கிரத்தி லிந்திரியம் கலித மாச்சே. 15

ஆச்சென்ற சகலஜன வசியம் பண்ண
அழகான சீதேவி யான சாற்றில்
பேச்சொன்று மின்றிக்கல் நண்டு கூட்டிப்
பிரியமுட னரைத்துவைக்க இதுபோற் செய்து
பேச்சொன்று மின்றிமந் திரத்துக் செல்லாம்
முதலெழுத்தை நூறுதரம் உச்சரித்து
வாச்சென்று லலாடத்திற் றிலதம் வைக்க
வகைவகையா வுலகவசி கரமு மாமே. 16





## அறிக்கை.

இப்போது யூகிமுனி நூல் முந்நூறு அச்சாகி வருகின்றது. இன்னும் மூன்று மாதங்களில் (1-9-1915) வெளிவரும். விலை ரூபாய் ஒன்றாகும்; மேற்படி தேதிக்குள் முன் பணமனுப்புவோருக்கு அணா பன்னிரண்டிற்குக் கொடுக்கப்படும்.

தேவிபாதம்.

# யூகிமுனி கரிசலை-36.

---

இது

பாலயோகியும்

ஆயுள்வேத பண்டிதருமாகிய

V. R. சுந்தரம் அவர்களால்

பல ஏட்டுப்பிரதிகளைக் கொண்டு

பரிசோதிக்கப்பட்டு



மங்கலம்—ஷண்முக முதலியாரால்

சென்னை

கோமளேசுவரன் பேட்டை

சச்சிதானந்த அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1915



[விலை அணா 4.

# யூகிமுனி கரிசலை - 36.

## அட்டவணை.





தேவிபாதம்.

# யூகிமுனி கரிசலை

## முப்பத்தாறு.



துதி.

உமையவள் பதமல ரடியிணை சிரமேற்
றமியனு மருந்தின நினைவினி னினைவாம். 1

காமனை யெரிசெய்த வாமனை நினைவில்
சோமன் பதமல ரிணைநீ துதியே. 2

மூவைந் தொகைவகை முனியரு ளியசொல்
பாவைச் சுருதியிற் பதியரு ளியதே. 3

வாதமு மருந்தினம் வகையது பாராய்
நீதிசேர் ஞானமு நிலைபடு முன்னே. 4

பாயிரம் — அகவல்.

உடலூறு கருவியி லுதித்த வியாதிகள்
திடமதா யகல விளங்கொளி யவிழ்தம்

யாவையும் விளக்க வகுத்த பாகமும்
கோவையாய் மொழிகள் குணமுள முனிவர்
பகர்ந்தது ஜைமினி பகரவே சுருக்கி
முழுவது முனிவ ரருளிய மூவறு மொழியே
குணகடல் குமரி குடகம் வேங்கட
மெனுநான் கெல்லையி னிருந்தமிழ் யாவரு
மூணர்ந்தோர்
தொகைவகை விரியி லருள்கெனத் தன்ற
றிகலற முந்நூல்
பெருகவே சுருக்கிப் பலமுள நூலாய்
தன்மத வாரணந்
திசைதொறு நிறுவிய திறலுறு தொல்சீர்
கருங்கடல் வெண்குடைக் கார்நிகர் பொதிகைத்
திருந்திய செங்கோற் சீயகங்க
னருங்கலை விநோத மார்பன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே வைத்தியத் திந்நூற் சூத்திரம்
பெயரென வகுத்தனன்
பொன்மணி பொதிகை மஹாமுநி யருளிய
கரிசலின் முந்நூற்
சுருக்கியே குருமுநி சொன்னது சூத்திரம்
ஜெகதல மானிடர் செய்யும் வைத்தியம்
தொகை வகையாகத் தரிதம துரைத்த
மகாவித சூத்திர மறைப்பையுந் திரந்து
ஜெகமே துரைபோற் றெளிடந்திட னன்றே. 1

சற்சீடரியல்பு.

பாலுடன் கலந்த நீரதைப் பிரித்துக்
குடித்தது போல வன்னமா ணக்கர்

ஆவு தண்ணீ ருண்டது போல
ஏவல்மா ணாக்க ரிருக்கவு நன்றே. 2

அசற்சீடரியல்பு.

கிளிபோற் பேசும் சீட ராகாத்
தூறினி லுடைந்த குடநீர் போல
சீறிய சீடன் சிந்தையு மாகா
எருமை குழப்பி நீரது குடிக்கு
மமையாச் சீட னவனுமே யாகா
சிரித்தல் சோம்பல் மானமாய்ச் சொல்லல்
காமி கள்வன் பிணிய னேழை
பிணக்கன் சினத்தன் றுயில்வோன் மந்தன்
தறுகணன் சாத்திரந் தடுமா றுளத்தன்
கேட்டான் பாவி புறட்ட னின்னோர்க்குக்
காட்டார் சாத்திரங் கொடுக்கார் நூலே. 3

இந்நூலிற் கூறிய பொருள்.

களங்கம் பஸ்பம் சிந்தூர லேகிய
முளங்கொளு மெழுகு முறுதியாந் தைலம்
சுன்னங் கிருதம் பதங்கந் திராவக
நன்னய மாக நவின்றனர் முனியே. 4

மாரசம் ஐயரச மயமான சாரசம்
போரசம் சண்ட ரசமது சொல்லல்
பர்த ரசமும் பகர்வீர ரசமுஞ்
சாதனை யயரசஞ் சாக்கிலே சேர்க்கலே. 5

மந்திரம்.

பீஜ மிலக்குமி பீஜ நமாவென
வியாதிநா சாஞ்சனி பிணிகள் நாசனீ

யோகினி வேதாஞ்சனி உருத்திர நாசனீ
சத்துரு நாசனி சங்கிலி ஓமென
வித்தையி லாஞ்சனி விடுத்திடப் போகுஞ்
சிந்தையி னினைத்த தெல்லாந் தந்தருள்
விந்தையாம் லோக மாதா வென்ன
முந்த வுரைத்திட மருந்துகள் சித்தி
அஷ்ட தந்திர அஷ்டவித் தைகளுஞ்
சிஷ்டர் புரிந்தால் ஜெயசித்தி யாகுமே. 6

இரசங் கட்டும் வகை.

அரன் பீசங்கட்ட வறைகுவன் கேளு
திரமான விரதம் ஜெகஜால வித்தை
யாகுமே கட்டி லருளாய வானந்தம்
சேருமே மணியே துப்பற வாகச்
செய்தாற் பலனும் ஜெயமாக வித்தை
பையவே கேளு பலிப்பதா மந்திரம்
மருந்துகள் சித்தி மஹாவித மாகும்
அருந்தவே ஜெபித்தா லடைவாய்ச் சித்தி
ஆமே சொல்வே னடைவுடன் கேளு
மதிபல முருக்கி வகையாய்க் குகையில்
அதியவே யிலுப்பைநெய் யடைவாக விட்டு
யெரிகையி லிரத மின்பமா மதியின்
தரிசின மாகச் சிக்கவே யிட்டுப்
பத்தி யெரியப் பதமாக விட்டுச்
சித்தியாய் ரசமதி சேர்ந்துமே யுருகும்
பெருங்குகை யாகப் பிலக்கவே யிட்டு
வருங்குகை தன்னில் வளமாய் நெய்யை
யிலுப்பை நெய்யை யிதமாய் விட்டுப்
பருகவே துரிசைப் பதமாய்க் கரியில்

ஊதிடநீறு முறுதியா யெண்ணெயில்
நீதியாய்க் களஞ்சு நேருள குகையில்
போட்டுமே கடையில் போக்கோ டெடுத்து
நீட்டுமேவுண்டையாய் நேரா யிடவும்
மிச்சம் பழத்துளே மிதமாய்ச் செலுத்தி
நச்சர வாக நாடியே நூறு
புடமிட யிருக்கும் போக்கொடு கேளு
நடமிடப் புடமிடு நாட்டியே விசைவிசை
யொவ்வொரு பழத்தி லூதுமே யொருதரம்
கவ்வவே புடமிடு காட்டநா லெருவில்
கரியி லுருக்குக் கனமுள மணியாய்ப்
பரியவே யிருபத் தொருமணி செய்து
தமராது விட்டுத் தாழ்வடங் கோத்து
அமரவே ஜபங்க ளாதியாய்ச் செய்து
அக்ஷரஞ் செபிக்க ஆதியாய்ச் சித்தி
நிச்சய மாக நீடூழி கால
மிருந்திடச் சித்தி யியல்பாய்க் கேளு
பொருந்து வினைகள் போக்கோ டேகும்
எல்லாஞ் சித்தியா மியல்புட னன்று
சொல்லால் முனிவர் சொன்னது சூத்திர
மெல்லையில் வாழு மின்பமா மனிதர்
செய்துமே வைத்தியந் திரமுடன் வாழ்வீர்
பையவே மாமுனி பகர்ந்த கரிசலின்
மூந்நூற் றறுபத்து நான்குசூத் திரத்தைச்
சின்னூ லாகத் தெளிந்திடப் பாடி
வாத வைத்தியம் வகையுடன் பாரே
நாதனார் சொன்ன நன்மா முனியே. 7

## வீரரசபதங்கமும் - அதனாற்றீரும் வியாதியும்.

வண்ணம்.

வீரரச மேயொரு சேரெடு நீதழு
லுப்பொடு செங்க விட்டெரி கடமதில்
பருவந் தனிலெடு பணவெடை மதுவிடு
திரிவ மனுளத் திரிதனில் வெகுநோய்
அறிகுண நயமிது வபயம் நோயறு
மதிவெகு புண்புரை வயிற்றுவலி கூறும்
படுவரை யாப்பு பரிகெடும் வெகுரண
மதிசய க்ஷயமீளை யாதியா நோயறும்
பதிவலி மேகம் படுமுறை திரிநாள்
கடல்புகு நோய்கள் கதிபெறு ரசமதில்
ஈறது கட்டில் கருவே
லறுகு முளகுட னதில்வெகு கியாழமாய்
வைத்திடு கொப்புளி வீறது அடிபடும்
செயசய புளிபுகை யிலையது வகல
நயமுள பாத ரசமது பற்பங்
குறுமுனி யருளிய மொழியது பாரே. 8

## அயக்காந்தச் சிந்தூரம்.

காந்தமும், அரப்பொடி நேரிடு அலைவறு
சிந்தையி னினிபுகை நீர்தனி லரைவறு
முந்தவே நிறமது பவளம தாமினி
சிந்தையி லெடுமினி செய்வன நீறதி
விடையிடு வாலை நீரதி லரை
திரிநே ரடையிடு
இடுகட மதிலெடு யிடுமுத் தீயெரி
யிடுவது வடிதனில் விடுமதை யரைபுகைநீ
ரரைகட மரையடை யெரியிடு திரிநேர்

அடிதனி லுருகிடு மதையெடு பணவெடை
திரிகடு வாளம் நேர் கரிக்கிடு
வெருகடி தனிவிடு மதுவிடு குழையுண்
நாலே ழிருபொழு துண்டிரு
புளி புகையிலை தள்ளிடில் பிளவைகள்
ரண மினிதுள மினிர் கூர்மம்
படுவரை யாப்புக ளடுபிணிக் குட்டம்
கபமுட னீளைக ளெலிகடி யதுவற
வலிவுட னிசிவுகள் வாதம் பொடிபட
நொடிபடு பித்தம் மெடுபடு நோய்கள்
தவிடது பொடிபோ
லடிபடும் பிணிக ளிடிவிழப் பொடிபடும்
முனிசொல வருளிய பெருவழி நூலி
லதையறி யூகிக் காந்தயம் பவளமே. 9

இரசபஸ்பம்.

ஈராறு ரசமிதெட்டு யினிதான பண்ணை
யிதிலானபாதி இடவே ரசத்தை யடைவாய்
காராறு புகைநீர் தன்னைக் கடிதாகவூற்றி
கனிவாக வேகக் கலமான கல்வமதிலே
வாராறு ரவியில் வளமாக வைக்க
வடிவாக நீறும் வகையான பண்ணைநேரே
சாராறு வரைத்து வில்லை சரியானசட்டி
தனிவிட்டு வுப்பு தனிநான்கு படிவிடுகவே. 10

விடவே வறுத்து விதமான தூறில்
விடுபூவு மிட்டு விடமேலே வில்லைவைத்து
திடமாக மூடி திருவான சீலை
திரிநேரு செய்து திடமாயெரிப்பு நூறு

படவே பெரித்து பதமாக விட்டு
பதியா யெடுக்க மதிபோ
லடைவான நெய்யி லதிலிட் டுண்ணு
அகமான விபாதி போமே. 11

போமேக மேகும் புழுவான வெட்டு
புகழான வெட்டை விரணம்
தாமேகு மெல்லாந் தனியான குட்டந்
தயவான காசமேகம்
காமேகு நோய்கள் கடவிட்டு புக்குங்
கனிவாக புகையிலை தளு
வாமே யுனக்கு வலுவுள்ள நோய்கள்
வகையார முனி பகர்வதே. 12

பேதி அயக்காந்தம்.

அயக்காந்த நேரே யளவாய் நிறுத்து
அதிற்கையா நீரை யடைவாகவிட்டு வரைநேர்
பயமாக வில்லை பதியா யுலர்த்தி
பரிவான நூறு பதிவாக வெருவில்போடு
நயமாக விட்டு நலமா யெடுத்து
நகையான செக்க ரடியான தானிறமதாய்
தயவா யெடுத்துத் தசமாக வாறு
தனியே நிறுத்து ததியாய் நறுக்கிபொடியே. 13

பொடிசெய்து சூதம் புலனுக நான்கு
புதிதான கெந்தி பதிவாக முன்னீரையிடு
வடிவான நேரே வகையா யரைக்க
வளமாய்க் கறுக்கும் வகையான ஜாமமேகம்
துடியா யரைத்து தொகையான வாளம்
துரையாயிரண்டு துடியாய் நிறுத்து அரைநேர்

படியான சுக்கு பதமா விரண்டு
பதமான மிளகு பதமிரண்டு தானரையிடே. 14

இடமேவ கடுக்கா யிதிற்பத்து ஆறு
இதில் நெல்லி முள்ளி இனிதான பத்து ஆறு
திடமாக விட்டு திறமா யரைத்துத்
திரியான கையான் திரமான நீரிலரைநேர்
படமாக தானே பதிவாக வெண்ணெய்
பரிவா யரைத்துப் பதமாக தானுலரவே
வடமாக மூன்று விரலா லெடுத்து [வே.
வகையான தேனில் வழியோடு கொள்ளுமென

எனவேக மூன்று இதமான நாளி
லினிகொள்ள நோய்க ளிதமான புளிபுகையிலே
தனவேக மாகத் தனியாகத் தள்ளு
தயவான நோய்கள் தடையில்லை சோகைபோகும்
வனவேக மேக காமாலை போகும்
வடிவான பாண்டு வகையோடு வாதமேகும்
கனமான பித்தங் கனிவான மாலை
கடலான சூலை கதமான பித்தமறுமே. 16

## சுரத்திற்கு மலங்கழிய மாத்திரை.

நாத்தமுந் தானிரது நல்லநாடியே நான்குபலம்
அரைக்கிறவி சிலமுதனை யென அரைநேர்
பாத்துமேதான் கடுக்காய் நெல்லி முள்ளியு
முன்னிடைசேர உடைபோம்பாடு இதில்
முன்னிட தாணியிநேர்
சாற்றிடவாள மூன்று உடைதானே பருப்பெடுநீ
அந்தயதில் பொடிபட இடஅரை யெனநேர்

வாத்தியே வாளமூன்று இதில் வாக்கானதோ
உடைபோடு தொடியிடு சிறுபயாளவாய் [லெடுநீ
நேத்தியாய் இஞ்சிதனிலிதை நேருண்டையொ
சுரமறுங் கபம்விடு மௌனநினைநினையே[ன்றிடவே
சித்தமாய் வாதசுரந் துளசிதன்னிலே தானிடவே
அதம் விதம் பதம் அறுபத்து நான்கு சுரம்போம்
நத்தியே சீதசுரமிதில் நாடியே யோடிவிடு
முனிவருள் திருவருள் முறையென வறியே. 17

### இலிங்கரச அயக்காந்த சிந்தூரம்.

ஜகதலம் விளங்கும் ஜைமினி சொன்ன
நகைமகி மூலகர் நாடியே பார்த்தெடு
அயமுடன் காந்த மதீத நயமென
நயமுடன்பாக நவின்ற சிந்தூரம்
வாதமு மாகும் வியாதிகள் நாசமாம்
சேதம் வராது தெரிந்துகொள் வைத்தியர்

### அயச்சிந்தூரம்.

அயமது ஏக மதிலிடு வீரம்
நயமதா யையரை நாடியே யிட்டு
திராவக மதனால் திட்டமா யரைத்து
பாராமுக மாகப் பதியவே வறுக்கப்
பவழம தாகும் பதமா யெடுத்துத்
தவடிதாய்ப் பரம தந்திட வைத்து

### காந்தச் சிந்தூரம்.

ஓட்டுக் காந்த முண்மையா யேகந்
தாட்டிக மாகத் தடையற நிறுத்துக்
காணக் கியாழம் கடிதாக விட்டுத்

தோணவே யரைத்துத் தொக்கவே புடமிட
அருண நிறமதா மடைவுட னெடுத்து.

### அயக்காந்த மிரண்டுஞ் சேர்த்தல்.

தருணமாய் முன்னடை யயத்தினிற் சேரு
அரைத்துமே யிரண்டையு மடைவாக வில்லை
நிரைத்துமே யொன்றாய் நிலவர மாகவே
வில்லையாய்த் தட்டி விதமான குக்கிடத்
தெல்லையிற் போட்டுத் திரமா யெடுக்கப்
பவழம தாகும் பதியவே வைத்துக்
கவலையைச் சொல்வேன் கருத்துடன் கேளு

### இலிங்காச மெடுத்தல்.

லிங்கமுஞ் சரியாய் நேராய் நிறுத்துத்
துங்கமாய்த் திராவகத் தாலே யரைத்து
உமிநெருப் பிட்டு உண்மையாய்க் காய்ச்சித்
தமியவே யொட்டத் தவமா யுதிர்த்துக்
கடமதி லிட்டுக் கடமதால் மூடி
கடமதி லுளுந்து சீலைசெய் துடனே
எரியிடு தசமா மினிதுடன் கேளு
தரிப்பதாய் மலருந் தாஷ்டிக மாக
விருப்புடன் பிட்டு விதமாய்ப் பார்த்திட
சிறப்பதாய் மேலே சேர்ந்தே நிற்கும்
கரிபோற் கறுத்து கனக்கவே மேலே
நிற்கு மதனை நேர்மயிற் குச்சால்
தக்கவே யெடுக்கத் தயவாய்ச்சுரண்டு
எடுத்து பீங்கா னிலியல்பெற விட்டு
அடுத்துமே தேய்த்திட வடைவான வாலே
ரசமது வாகும் நலமுள ரசத்தில்

பிசகிலாத் திராவகம் பிலக்கவே விட்டு
வைக்கவே ரவியில் வளமாய் நீறும்
நீறது உபயம் நிலவர மாகவே
பார்த்து முன்னம் பகர்ந்த சிந்தூர
மெடைக்கெடை சேரு இன்பமாய்த் திராவக
நடைபெற விட்டு நலமா யரைத்துக்
கடத்தினி விட்டுக் கடமேற் கடமுங்
திடமதாய்க் கவிழ்த்துத் திட்டமா யுளுந்தால்
நடமிடக் கவச நலமாய்ச் செய்து
எரித்திடு ஏக வின்பமா யுள்ளே
வரித்தியே தீயெரி வளமா யிரத
மேலே யிருக்கும் விருப்பமாய்த் தேய்க்கக்
காலாக வேதான் கடிதான பாத
ரசமது வாச்சு நலியவே கேளு
பிசகிலாத் திராவகம் பிலக்கவே யூற்றி
விட்டுமே ரவியில் விருப்பமாய் வைக்க
கட்டுமே காளான் போலது நீறும்
நீற்றை யெடுத்து நேராங் கடத்தில்
வார்த்தையாய்ப் படியில் வளமாஞ் சிந்துரம்
சிந்து ரந்தனை சிறக்கவே ரவியி
லவிந்திட இருபதி லொன்றிடத் தங்கம்
தங்கமதாகும் தடையிலை பாரு
உங்கட் கிரங்கி யுறுதியாய்ச் சொன்னேன்
விற்றுச் செலவுசெய் திட்டுமே ஞானம்
சித்துகள் யோகம் சிறப்புடன் செய்யவே
சொன்னேன் ரசத்தைச் சுயம்பெறக் கொல்ல
நன்னய மாகு நாடியே பாரு
முன்னமே செய்து முடிக்கப் பலனும்

கன்னல்போ லாகும் கனிவான வாதம்
சொன்ன படிக்குச் சுயமாய்ச் செய்து
இந்நிலந் தன்னி லின்பமாய் வைத்தியந்
தனியே செய்து தாக்கிடச் சித்தி
லிங்க ரசவயக் காந்தச் சிந்தூர
முங்கள் குலத்தி லொருபண வெடையிடு
மண்டலங் கொள்ள மகாவெகு நோய்போம்.

இதற்கு அநுபானமும், அதனாற்றீரும் வியாதிகளும்.

திரிகடு தனிலிடு ஜெயமாம் பித்தமுந்
துரியமாய் நாற்பத் தெட்டு மொழிந்திடும்
பத்தியங் கைப்பும் பதையாமல் தள்ளு
சித்தியாந் தேகஞ் ஜெயமாய் நின்றிடும்
சுக்கு மிளகு வாள மிரண்டு
மிக்கவே கடுக்காய் தானிரண் டாகும்
நெல்லி முள்ளி நேர்பதி னாறு
எல்லாம் பொடித்து இன்பமாய்க் கேளு
கரிப்பா னீரால் காண வரைத்து
தரிப்பா ரவியில் தானிடு காயம்
வைத்துப் பொடித்து வளமாய் வெருகடி
கைத்து எடுத்துக் கனிவா யுளங்கை
நடுவிலே வைத்து நலமாம் சிந்தூரம்
கடுகவே பணவெடை காட்டியே யுண்ண
வுண்டிடும் போது உறவாம் வியாதிகள்
நன்னய மாக நவிலுவேன் கேளு
வாதமும் வாயுவும் வளமாய்த் தானறுஞ்
சேதமாய் மேக வாய்வுகள் போகும்
கால்கைக் குடைச்சல் கனமாம் பீனிசந்
தூலமாய்த் தந்த வாய்வுகள் போகும்

மேக ரணமும் விடுபடுங் குன்மமுந்
தாக மொழியுந் தனியான அஷ்ட
குன்மமும் போகும் குணமுள வலிழ்கரு
சூலைவிப் புருதி தொலையும் பெரும்பாடு
வாலையைப் போலே மகத்தான தேகமாம்
கிராணி கழிச்சல் கனமாக நின்றிடும்
வராணி மகோதரம் வடிவாய்ப் போய்விடும்
சயத்திற் கருபானஞ் சாற்றவே கேளு
பயத்துடன் தூது வளையின் புஷ்பம்
பூவை யெடுத்துப் பெரிய கடத்தி
லாவலாய்ப் பாணி யதிலிடு காலாய்
தேவையாய் வாயில் திட்டமாய்ச் சீலை
கட்டியே மேலிடு கனமாம் பூவை
திட்டமா யதன்மேல் திடமாய்ச் சட்டியை
மூடியே யெரிமேன் முக்கிய மாகத்
தேடியே புட்டாய்த் திடமா யவித்து
நாடியே பிழிந்து நலமாய்ச் சொல்வேன்
பணவெடை சிந்தூரம் பதியவே யிட்டு
குணமதாய்க் கொடுக்க குணமுள காசம்
அதமதாய்ப் போகு மதுபனி ரண்டுங்
தீராக் குட்டந் தீர்ந்திடக் கேளு
நிமிரது எட்டி மரமுடன் வேலை
சீவியே பொடியாய்த் திட்டமாய் ரவியில்
காயவே பொடித்துக் கனமாய் வைத்திடு
நோய்க்கு வெருகடி நுகரவே யிட்டு
சிந்தூரம் பணவெடை செப்பமா யிட்டு
விந்தையாய் வெந்நீர் விருப்பமா யிட்டு
குழைத்துண மண்டலங் குறைநோய் குட்டம்

பிழைத்துமே போடும் பிலமா நல்லெண்ணெய்
ஆகா தென்று வரைந்தனர் முனிவர்
தாகமா யண்டம் பௌத்திரந் தீரும்
ஈளை பிரும மெலிகடி தீரும்
கோளைநீ ரிழிவு குடிகெட்டுப் போகும்
விந்து விறுகும் விருப்பமாய்ச் சித்தி
சேர்ந்திடப் பெண்களைச் செயலான போகம்
ஊற்றது போல ஆறுமே காமம்
சேர்த்திட வடைப்பு மலஜலம் பிடுங்கும்
வாத மெண்பதும் வகைதொகை நாசமாம்
சேம வளியது சேர்த்திடப் போகும்
பொதிகை மலையில் பொருந்தவே யிருந்து
வதிசய மான கரிசலைப் பாடி .
இதையுஞ் சுருக்கி யிதைமுப்பத் தாறாய்
விதமுடன் பாடினேன் விருப்பமாய்ப் பாரு
மாமுனி யருளிய மாலிங்க ரசவய
கோமுனி காந்த சிந்தூர மிதனுமே.

**நாக பஸ்பம் - வேறு.**

நாகமது பலமேக நாடிகட மிட்டு
நலமா யுருக்குமுகந் தன்னிலுபய மிளகு
வேகமா யுருக்குமுகந் தன்னிலே தாவு
வித்தகமாய் நீறியது முத்துபோ லாகும்
ஆகுமது நாகமதை யளவாய் நிறுத்து
ஆதிபினி ரசமதனை திரியேகம் விட்டு
சோகமென வெடியுப்பு நீரை விட்டு
சுத்தரவி தனில்வைக்க பூர்க்குமது பாரே. 19
பூர்த்தரசந் தன்னிலெடை நாகபற்ப நிறுத்து
போரான திராவகத்தா லரைகடந் தன்னில்

சேர்த்துமே யெரித்திடவே ஜெயமாக வேறும்
ஜெயவேதை யேறினதை வழித்துபுகை நீரால்
பார்த்துமே நீர்விட்டு ரவிதனிலே வைக்கப்
பதிவான ரசநீறு பக்குவம தாகுங்
கார்த்துமே படிநின்ற வாசுகிபற் பத்தில்
கனிவாகச் சேர்த்தரைத்து கடமதினி லேரியே 20
எரித்திடவே யிப்படியே ஐந்துமுறை செய்ய
இயல்பாக ரசந்தானு மடியிலே நிற்கும்
வருத்திடவே செம்புதனில் நூறொன்று இடவே
வகையான ஆணிக்கி யெட்டரையே காணுங்
குரித்திடவே யிதைவைத்து ஞானவழி பாரு
கருவான சுழுமுனையில் வலுவாக நில்லு
கருத்திடவே கைபாகந் தப்பினு லாகா
கருணைபெறப் பாகமாய்ச் செய்திடவே சித்தி. 21

## இதனுற்றீரும் வியாதிகள்.

சித்தியாம் பணவெடை தாநித்த மண்டலமே
சிதறுக வலிகுன்மம் பித்தமுதல் போகும்
நத்தியே காசமுதல் வாதமுதல் தீரு
நலமான மேகரணம் மேகவாய் வெல்லாம்
முத்திய பெருவயிறு தந்தமுதல் வலியு
முனையான மகோதரமு முதிரவலி தீருஞ்
சத்தியமா மிம்மொழிக ளாகுமது பாகந்
தவறாமற் செய்திடவே மாமுனிவர் சொல்லே.

## தாம்பிர ரசச் சிந்தூரம்.

பொடிரசி ரசனென்னை போமளை மூன்றுமேநேர்
பிடிவனை சங்கநீரு பிதையபரை வில்லைசெய்து
பினிரவி காயவைத்து

நடையிடு புடமதாக நவிலவே பவழமாகும்
மதையெடு யேகமாக வன்னியும் பாகமாகும்
வலுவுள புகைநிறுத்து வருநிலப் புகையுமாகு
மூன்னியே கடமுமிட்டு முறுதிபி லெரிக்கவேறு
மூண்மையும் வாலையாகும்
உறுதிபாய்ப் பீங்கானிட்டு வுறுபுகை நீரையூற்றி
வுக மதில் நிறம தாகும்
வருமென கடமுமிட்டு வகையதா யெரிக்கவேறும்
வழி யது யெடுத்து மைந்தா
நலமுடன் ரசமதாகு நவிலவே புகைநீ ராற்று
நலமுடனீரில் கந்தம் கலயதில் ரவிசிந்தூரங்
கடுகவே யரைத்து வில்லை
கனமதாய்க் கடமுமிட்டு வளமதா யிதுபோலேந்து
வகையதா யெரித்துப் பாரு
ஜெகதலம் பவளமாகுஞ் சேருமே ரவிநாறென்றி
அகமது பத்துமாற்று அதிசய புடமிறங்கும் [ல்
அலம்வரு ஞானபோக மதில்வெகு நயமதாகு
மணுகிடில் மேகவாயு வதுபொடி கர்மமெல்லா
மலம்வரும் வாதமேக மதில்வரு பித்தமேகந்
தணலது மேனியாகுந் தணிமகோ தரமுமேகுந்
தகைபெறு காசம்போகுந் தடையிலை காயசித்தி
கனல்ரவி யிரதமான கடிதொரு சிந்தூரந்தான்
கதிபெறு மாமுனிவர் கனிந்துதா னுரைத்தசொ
[ல்லே. 23

## வாளபேதி மாத்திரை.

ஆதி மாமுனி யருளிய கரிசல்
நீதியாய் முந்நூற் றறுபதிற் சுருக்கி

வேதபாராயண முப்பத் தாறுய்க்
காதலாய்ப் பாகங் கைமுறை சரியாய்ச்
சொன்னதிற் சூத்திரஞ் சுருக்கம் பெருநூல்
நன்னய மாக நவின்றெத்துப் பார்த்துச்
செய்திடச் சித்தி ஜெகமுறை வைத்தியம்
பையவே பேதி வகையாகச் சொன்னதில்
பச்சை யென்பது பதிவான வாளமாம்
இச்சையாய் வறுக்கச் சொன்னது வாளம்
இதுவிரண் டொன்று இனியரச வாதிகள்
பதிவாய்க் கையின் பாகம தறிநீ
அறிந்திடப் பாக மடைவது கேளு
பிரிந்திடச் சொல்வேன் பிசகற வைத்தியா
வேர்க்கொம்பு திப்பிலி மிளகிலே டிந்து
தேர்கடுகு ரோகணி சிவதைபோ டெருக்கும்
பார்வன்னி யொன்று பதமா யெட்டிற்கும்
சேர்சரி வாளம் ஜெயமா யரைக்க
காம்பழச் சாறு கடியவொரு ஜாமம்
விட்டு அரைத்திடு விதமாய் நாளுங்
கட்டுமே குண்டு மணியின் விரையா
யுருட்டி ரவியி லுண்மையாய் வைத்து
வுருட்டியே முழுதாய் வாகா யுண்டிட
உள்ளே சென்று உண்மையா யுண்டை
கரைந்து கரைந்து கனிவாய்ப் பேதியாம்
உண்டிடு வுண்ண முறுதியாய்ப் பேதி
கண்டித மான நெஞ்செரி யாது
வாந்தியண் ணாது வகையாய் மலஜலம்
சேர்ந்துமே வழுகும் ஜெயமான பேதியாய்
பேதியு நிரப்பப் பொருந்த சரீரம்

ஆதியாய்ப் பாலிற் கஞ்சியுங் கூட்டு
கூட்டவே நிற்குஞ் சுரங்குளிர் சூலைபோம்
ஆட்டவே வாத வெண்பத்து நாலரும்
பெருநூல் கரிசல் பிரபல மாகவே
சிறுநூல் சொன்னேன் சுருக்கத்திற் சுருக்கிப்
பாடினேன் முப்பத் தாறுடன் சுருக்கம்
பெருநூல் சிறுநூ லிரண்டையுஞ் சோதி
திருவான பாகஞ் செய்திடச் சித்தியே. 24

### சிங்கமுகத் திராவகம்.

சித்தியாய்த் திராவகஞ் செய்திடக் கேளு
முத்திசேர் துருசு முடிவதாய் நிற்கும்
பெருநூல் திராவகம் பேதமா யொளித்ததில்
சிறு நூல் சுருக்கஞ் செயலறப் பார்த்து
திராவகம் வைத்துத் திட்டமா யுபாசம்
பராமுக மாகப பதையாமல் நீற்று
சிங்கமுகத் திராவகம் திரமாய்ச் சொல்லுவன்
உங்கள் குலங்க ளுறுதியாய் வாழ
ரசமது ஏகப். நவிலவே கேரு
பிசகிலா வுப்பு பெரிதா யரைத்து
செங்கல்மா நான்குக் கொன்று சேர்த்து
துங்கவே யரைத்துத் துப்பற வாக
சட்டியி லிட்டுச் சதிபெற வதன்மே
லிட்டமாய் ரசத்தை யினியவே யிட்டு
மேலது மூடி விருப்பமா யுருந்து
சீலைசெய் யேழு ஜெயமா யடுப்பில்
வைத்துமே யெரித்திடு வாகாய்ப் பனிரண்டு
செத்துமே யேறும் ஜெயமுள பஸ்பமாம்

எடுத்துமே வழித்து இன்பமாய்க் கேளு
அடுத்துமே வெடிதச மன்பாய் நிறுத்து
ரசமா வுப்பையு நவிலவே நிறுத்து
பிசகிலா சீன விருபத் தைந்து
மூன்றையு மொன்றாய் முடியவே யிடித்துத்
தோன்றவே சக்கர வாலையி னடியில்
போட்டுமே யரைகடம் பொருந்தவே மூடி
காட்டுமே தீபங் கமலங் காடாக்னி
உளுந்து சீலை யுறுதியாய்ச் செய்து
அழுந்தவே வாலை மூக்கினி லரக்குக்
குப்பியை யுள்ளே செலுத்தி யெரித்திடு
திராவக மிறங்குந் தடைமுன் னீரும்
பாராமுக மாகப் பதியவே வெள்ளையாம்
ஊற்றி டேன மூற்றிப்பின் னீரை
யேற்றி யேயெடுத் தினியகண பதியைத்
தோத்திரஞ் செய்து தொகைபது கேளு
பாத்திர மாகும் பதியவே யேமமாம்
அகமதி லிருந்து அன்புடன் பூசி
ஜெகமதி லோக மெல்லாம் நீறும்
வகையதாய்த் திராவகம் வைத்திடச் சித்தி
தொகைவகை யாகுந் தொல்லுல குள்ள
உபரச மெல்லா முறுதியாய் நிற்கும்
பலமான திராவக மிதுதான்
கும்ப முனிதான் கூறின திராவக
மன்பதாய் வைத்திடச் சித்திய தாமே.

**வீரசமும்-வீரச பஸ்பமும் சிந்தூரமும்.**

வீர ரசத்தை விருப்பமாய்க் கேளு
கோரமாய் விபாதி குடிவிட் டோடும்

வாதமு மாகும் வசியமு மாகுஞ்
சேதம் வராது ஜெகதலம் விளங்கும
அரைக்கையில் வீர ரசம தெடுக்க
முறைப்படி சொல்வேன் முக்கிய மாகும்
வீரந் தசமெடு விருப்பமாய்த் தானே
தாரமாய்த் தண்ட வாளமு மிரண்டு
உடையரை யிரண்டு முறுதியாய் ரசமாந்
தடையது படாமல் தானே கக்கிடும்
கக்கின ரசத்தைக் கருணையா யெடுத்து
மிக்கவே வுப்பி லெரித்திட வேறி
வெள்ளையாய் நீறும் விதமாய்ச் சுரண்டி
துள்ளவே பணவெடை தூக்கிவெல் லத்தி
லிட்டிட நோய்க ளெல்லாம் போகும்
துட்ட ரிடத்தில் சொல்லவே வேண்டாம்
வயித்திய நல்ல முறையிது சத்தியம்
பயத்திறற் செய்தால் பலிக்கு மவிழ்தம்
வீரபஸ் பத்தில் விதமான திராவகங்
காரமா யூற்று கருத்தாய்க் காய்ச்சி
மேருவி லிட்டு விதமா யெரித்திட
பாருமே பவழம் பதியவே யாகிடு
மண்டல முண்டால் மகாரோகம் போகும்
தொண்டருக் கருளின் தொல்லுல குள்ளோர்
ரவிநா ளொன்றில் நாட்டிடத் தங்கமாம்
கவியவே யிந்தக் கணக்கையும் பாரு
வீர சிந்தூரம் வித்தையி லதிகம்
பாரமாய்ப் பார்க்கப் பதியவே சித்தி
வடநூல் கிரந்தம் வகையுடன் பார்த்துத்
திடமாய்த் தமிழால் திட்டமா யெடுத்துச்

சொன்னேனன் மாமுனி சுருதி புலத்தியர்
நன்னய மாக நவின்றசிந் தூரமே
ஏம மோர்நிறை யின்பமாய்த் தான்ரவி
வாம மாகவே வாகா யுருக்கிநீ
காம நாகமுங் காட்டிடு வீரமுந்
தோமம் வேதைபாந் தொக்கவே பாருமே.

## வீரத்திராவகம்.

வீரத் திராவகம் வித்தையினி சொல்வேன்
காரமாய்த் தானே கடிசெலா நீறும்
வெடிபலம் நூறு விதமணி சீனம்
படிபோல் நிறுத்துப் பகரெடை சரியாய்
வீரமு மிருபத் தஞ்சுடன் போட்டுக்
காரமாய்ப் பொடித்துக் கணக்கது கேளு
வாலையி லிட்டு வகையாய்க் கடமரை
பாலை யடுப்பின் பிரியவே யிட்டு
வடித்திடு திராவகம் வகையாய் முன்போல்
துடியா யெடுத்துத் தூக்கிட அரக்குக்
குப்பியி லிட்டுக் குரூரமாய்க் கேளு
தப்பியே போகா தானது பாகமாய்ச்
சரக்கெலாங் கட்டுந் தானது நீறும்
பார்க்கவே பெருமை பகர்தல் முடியா
பாஷாண மெல்லாம் பதையாமல் நீறும்
தேளா முபாரசந் தென்பாய் நீறும
திராவகம் போலே தாக்கிடச் சித்தியாம்
பாராமுக மிலாமற் பதமாய்ச் செய்திடு
எல்லாமுங் கட்டு மினிது புலத்தியர்
சொல்லாற் பெரியோர் சொன்னது புத்தி

உப்பி னாலே உறுதியாய் வாதமாந்
தப்பித மில்லை தான்சத் தியமாம்
முக்கிய மாக முன்னே வைத்திடு
மிக்கவே யெல்லாம் விரும்பியே யாகுந்
திடமாய்த் திராவகந் திட்டமா மூலிகை
வடம சாறு வகையான மூன்றுநா
ளிட்டு மேயிழிந் தினிதான் சரக்கைத்
தொட்டிடக் கட்டுந் துடிப்புடன் வேதை
யாகுமே பாரு அதில்வருஞ் சித்தியா
துரிசின் போக்குத் தொகையாய்க் கேளு
பரிசின வேதை பார்க்கவே சொல்வேன்
துரிசையிந் நீரில் துடிப்பறத் தோய்த்து
வரிசையா யெட்டு நாளது போட்டிடும்
பொருமியே நீறும் பொருந்தவே வங்க
மருமையாய்ச் சுன்ன மடைவது கட்டுங்
குக்கிட புடமிடு கொடூரமாஞ் சுன்ன
மிக்கதோர் சூத மிகநல் லேவல்
கேட்குமே கட்டுக் கெவனமாங் குளிகை
தனக்குமே பணிவடை தந்துவாய்ப் போக்கும்
நவலோக மொன்பது நாடியே தங்கமாந்
தவப்பல னாகுந் தர்க்கம்பே சாதே
தாளகந் துவைத்திடு தாக்கவே யெட்டு
வாளகம் போலே வலுவாய் நீறும்
செம்புநா ளொன்றில் சேர்த்திடத் தங்கமாம்
வம்புசெய் யாமல் வகையுடன் பாரு
கெந்தகம் வீரங் கெடியான பூரமுந்
தந்திடு மனோசிலை தக்கதோர் வெள்ளையு
மிப்படி நீற்றிட யின்பமா யேமமாந்

தப்பித மில்லை தானே நீற்றிடும்
வாழ்வு முனக்கு வகையாய் நின்றிடும்
தாழ்வு வாராது தாழ்ச்சியு மில்லை
தங்கமு நாகமுந் தானறி வங்கமு
மிங்கித மாக இயல்பாய்க் கரும்பொன்
செம்பு மிப்படி ஜெயமாய் நீறிடும்
நம்பியே வாத நாடியே நின்றிடுஞ்
சமுமுனை தன்னில் சொக்கியே நின்றிடும்
பணிவொடு பாரு மதத்தால் கெடாதே
வாதி வாதி வளமாய்ப் பேசேடு
ஊதி யூதி யுறங்கவே வேண்டாந்
திராவகத் தாலே சகலமு மாகும்
பாராமுக மாகப் பலிக்கா தென்று
நாவினாற் சொல்லி நவில வேண்டாம்
மாமுனி அகஸ்தியர் வடமொழிக் கிரந்தங்
கோமுனி சொன்ன கொடியபுகை நீரே.

**ரசச்சிந்தூரம்.**

சோதிரசந் தனையே சுத்தி செய்து
தூசணி பீங்கா னிடுபலந் தசம்
கோட்டை யிடிக்கும் படைராசன் பத்தாங்
கூட்டிடு சீனமது
ஐயைந்துபலந்தான் பொடிபண்ணிவாலைசட்டியிடு
சக்கரமேல் கவிழ்த்து உருந்தாலே சீலைசெய்து
உறுதியா யுண்டெரி தீகமலம்
புகைவரும் வெள்ளைப் புகையைத் தள்ளி
நடு நீரை வித்தகமாய்ப் பிரித்துக்
கடைநீ ருகாரந் தானீரை யெடு
ரசமீ திட்டு ரவியில் வைக்கத்

தானது பற்ப மாகுமெடுத்துப் பின்
நீர்தனையிட்டு வைக்க நீறியிடும்
பின்னொடு பற்பமெலாங்
குப்பி யடை மீதிடுதான் கடத்தில்—உப்பு
இடுநால் விரல்செலுத்தி இதின்பேரில் தான்குப்பி
தானடுவில் வைத்துமேலே தான்கட மேல்கவிழ்த்
உழுந்துமண் கெட்டியாய்த் தான் கவசம் [து
பிலக்கவே செய்திடுஆறு நாளுயரவே தானேறி
மேல்சட்டியிற் பிடித்திடுங்
கையினால் தான்சுரண்டிக் குப்பி யடைதனில்
சிவந்திருந்த மருந்ததனைச் சேர்த்து அரைத்திடுநீ
புகைநீரைவிட்டு ரவிதனிலே காயவைத்துத் தானே
முன்போ லாறுதினந் திட்டமாய்த் தானெரிக்க [ரி
சிவந்திடு மிப்படி யைய்ந்து முறைப்
பாகமாக வின்பமாய்த் தானெரிக்கக் [தானே
கடைசியில் சிந்துரந்தா னெட்டுக்கொன்று தங்கந்
உருக்கியிடு நாகமொன்று சேர்த்திட வெள்ளை
[யாகுஞ்
சிந்துரத்தில் தானினிச்சேர்த் தரைத்துக் குப்பி
தானே யெரித்திடுநீ பவழ மாம் [யிட்டுத்
பாகமாய் மண்டலஞ் செயரசஞ் சாகும் [போகா
நாயமார் கற்பனையை யொருவரால்நாம் மதிக்கப்
புவிதனி லொன்பது லோகத்திடு [கும்
தனித்தனி கொடுத்துமே நூற்றொன்றில் தங்கமா
இங்கிதமாக வெடுரச வாதஞ் சித்தியே
ஏவல் கேட்கும் புலத்தியா [ய்க் காயசித்தாம்
உண்டிடுமண்டலம் திண்பணவெடை யுண்டையா
கதிர்மேனி செங்கதிர் போல் நிறமாம்

வலிகுன்மந் திட்டமாங்
காசமுதல் தலைவலி
வாதமெண்பது போம் பித்தமுதல்
வாகான தந்தவாயுவு அண்டவாயுவு போகுமே
ஜன்னிமுதல் திருமேனி மாந்தளிர்போல் நிறமாம்
ஜகதலமுன்னை வணங்கியிடும் இதுரசந் தானே
திராவகத்தால் மடிந்திட்ட தானெனச்செம் பிற்
றொடிதனி லேமமு மாகிவிடும் [பட்டால்
இதுநலங் கைப்புப் புளிப்புந் தள்ளு
இதையுண்ணு காயமுங் கற்றாளும்
விந்துகட்டும் மானுடர் புத்தி யில்லார்
பாகமாகச் செய்திட மாட்டா மலே
சூத்திரம் பொய்யென்று சொல்லுவார் பார்
வாதம் பொய்போனாற் சொல்லக்கேளு
உலகத்தில் தான்சிவந்தான் பாமும் பொய்யாகும்
வேதமுஞ் சொற் பொய் யாம்
குருமுனி மாமுனி சொன்னது தான்
சூத்திரத்தில் தான்மொழி சத்தியம்.

வேறு ரசத்திராவகம்-வேறு.

நலமதா மெல்லாம்
பிசகிலாநீர் பெருமையைக் கேளு
எல்லாம் ரவிதனி லின்பமாய் நீறுந்
சொல்லாற் பெரியவர் சித்தாம்
ரசத்தி ராவகம் பகர்ந்தா ரதுகேளு
பராமுக மாகப் பதியவே பாரு
வெடிதச நிறுத்து விதமாய்ச் சீனம்
படியை யைந்து பாய்ச்சி நிறுத்திடு
வாலையி லரைக்கட மாகவே பொடித்துப்

பாலையிற் போட்டுக் கனிவாயுளுந்து மண்
சிலையுஞ் செய்து சிறுகவே தீயெரி
பாலையின் மூக்கால் வடிந்திடும் வெள்ளைநீ
ரெடுத்துமே தள்ளி யிதமான மஞ்சள்நீர்
அடுத்துமே பிடித்து ஆண்மையைக் கேளு
சுத்த ரசமது ஏகமும் நிறுத்துப்
பத்தியாய்ப் பிடித்துப் புகைநீ ரெல்லா
மூற்றியே மூன்றுநா ளுண்மையாய் நிழலி
லேற்றியே வைத்திட யிதமாய்க் கரைந்து
தண்ணீர் போலாந் தாக்கவே கேளு
மண்ணியே மறுமுறை வாகாய் வெடியுந்
தசமது நிறுத்துத் தாக்கிடச் சீனம்
பிசகிலா யிருபத் தைந்துடன் பொடித்துக்
கடமதிலுருக்கு கிளரவே வெள்ளை நீர்
விடமதாய்ப் போக விட்டுமே பாரு
மஞ்சட் புகைவரும் வருகிற வப்போ
துஞ்சவே யெடுத்து ஆரவே வைத்து
ஊற்றிட முன்புகை நீரதை யதிலே
ஏற்றிடு அடுப்பினி லினியதோர் வாலை
சட்டியை மூடு சடுதியா யுளுந்துமண்
கெட்டியாய்ச் செய்து கிருபையா யெரித்திடு
வாலை மூக்கில் வளமாய்க் குப்பியை
வேலையா யிட்டு வைத்திடு வைத்தால்
புகையும் படாமல் புதுதிரு மேனியி
லிசவா யிருந்திடு யின்பரச வாதி
பட்டால் புகையும் பட்சம் விரிந்திடும்
கெட்டுமே போகாக் கிருந்திடு யிப்படி
ஐந்து முறையது வெவ்வே றாகச்
சொற்படியாகச் சுருக்கமா யுருக்கி

முன்புகை போக முடிவாய் மஞ்சள்
தென்பதாய்க் கண்டு திட்டமாய் முன்ரசத்
திராவக மூற்றி ஜலு தியாய் வடிநீர்
திருவருள் பெற்ற திராவக மாகும்
பிரஹ்மா விஷ்ணு ருத்திர னாகும்
ஆகுமே திராவக மடைவதுஞ் சொல்வேன்
அரக்குக் குப்பியில் வைத்துமே வைத்து
சிறக்கவே கேளு திட்டமாய் வேகந்
தங்கங் காரீயந் தயவுள்ள பித்தளை
யிங்கித மான செம்பது நீறும்
ஒன்பது லோகமு முண்மையாய் ரவியில்
தென்புட நீறுந் திருநட மாகும்
புகைநீர் வைத்துப் பொருந்தவே நீற்றுத்
தகையாது செல்வந் தானென்ன வருமே
மூலிகை தன்னில் முடிவுட நீற்றல்
கேலியாய்ப் பொய்யாம் கிருபையு மில்லை
தாம்பிரந் தன்னைத் தண்மையாய் மூலிகை
வம்பாய் நீற்றல் வருகா தப்பா
அண்டச் சுன்ன மடைவுடன் பண்ணி
தெண்டமாய்த் தாம்பிரப் பொடியில் சேர்த்து
அரைத்துமே வெண்கரு வாலே வில்லைசெய்
விரைந்துமே யூத வெள்ளையா யிருக்குஞ்
சுன்ன மிதுதான் சுருக்கமாய்ச் சொல்வார்
நன்னய மாக நாடியே பணத்தைப்
பிடுங்குவார் பாரு புத்தியா யிருநீ
திடங்கா ணின்னொரு தாம்பிரஞ் சொல்வேன்
அடமது சொல்லி அடைவாய் வங்கக்
குகையது பண்ணி யுள்ளோ செலுத்தி

வகையாய்ப் புடமிடு வாகாய்த் தூக்கிக்
காட்டுவர் வெள்ளையாய்க் கண்மயங் காதே
தேடிட னென்பார் திருடுவர் வாதி
ரவிபது நீற்ற நலமுட னுபாயங்
கவியவே சொல்வேன் கணக்காய்க் காய்ச்சித்
தோய்த்திட வெட்டையாய்த் தொக்கவே செய்து
பாச்சிது சுன்னம் பதிவுடன் கட்டினல்
நீறது வாகும் நினைவுடன் சோதனை
பார்த்திட விதனில் பலமா வாகும்
இப்படியாக வியல் பெறச் செயாமல்
தப்பித மாகத் தான்மேல் கட்டினல்
எப்படி நீறு மினிரச வாதிகாள்.

அப்பிரகச் சிந்தூரம்.

அப்பிர கத்தை யடைவுடன் வாதி
தப்பித மாகத் தான்மூ லிகையி
லரைத்து நூறு புடமிடப் பவளமாம்
நிரைத்துமே யுருக்க நிச்சயங் தளுக்காம்
இருக்குமே மின்னி யினிதாஞ் சோதனை
பெருக்கவே காட்டுவர் பிரட்டுரச வாதி
சத்துருச் சரக்கால் தகித்தால் தளுக்கில்லை
மித்துருக் கூட்டில் வியாதிகள் போகும்
இப்படி யிருக்க இதமாம் பாகந்
தப்பற மூலிகை தன்னால் அப்பிரக
மெப்படிச் சாகு மினிது புலத்தியர்
பெருநூல் தோறும் பெரிதா மூலிகை
பெரிதெனச் சொன்னேன் பலமாய்நம் பாதே.

காசிபர் காதை.

காசிப ரிஷியுங் கனக்கவே வங்கம்
வாசனை யாக வளமாய் நீற்று

துரிசின்மேற் கட்டித் துடிப்பற நீற்று
வரிசையாய்க் கவனம் வடிவாய் ரசத்தைக்
கட்டியே கவனங் கனிவா யேகுயில்
திட்டமாய்ப் பொதிகை கடந்துமே யப்பால்
தேவனும் பட்டணந் தெருவுக ளதிகம்
ஆவலாய் மறையோர் அறுநூறு வீதி
இப்படி யிருக்குந் தெருவொரு வீதி
தப்பித மில்லாத் தானொரு பிராமணன்
வீட்டிலே சென்று விரும்பியே பேச
தாட்டிக நூல்களாய்த் தர்க்க வாதிகள்
வெகுநூல் பார்த்து விருப்பமாய்ச் சரக்குத்
தருமா சுண்ணந் தடையற வைப்பவ
ரவரிடங் காசிப ரிஷிசொலும் வித்தை
ரசத்தை நீற்றில் வெண்மையாய்ச் சொல்ல
பிசகறத் தாம்பிரஞ் சுன்னமும் வைப்பே
னென்றுமே சொன்னா ரிணையடி தொழுமறை
யன்றுமே பிராமணன் அப்படி நம்பக்
காசிபர் வங்கச் சுன்னத்தைக் கையில்
வீசியே யடக்கமாய் வைத்துமே சென்று
வாக்கினில் வந்த மூலிகை கொண்டா
வென்றுமே சொன்னார் இதைநன்றாய் நம்பி
கொண்டுவந் தார்மறை யோர்களு மப்போ
பண்டுமே வங்கஞ் சுன்னங்கா ணமல்
மூலிகை தன்னை முடிவற வாங்கி
கேலியாய் வங்கச் சுன்னத்தை யிட்டுப்
பிழிந்துமே செம்பு துரிசில் கலக்கவே
நீர்வடிந் ததுமே வகையறி யாமல்
மூலிகை தன்னில் நீறுஞ் செம்பு

என்றுமே நினைத்து இசைவாய்த் தெரிந்து
போச்சுதே யென்று போனபின் மூலிகை
வாச்சுதே பிரிய வாக்கான செம்பு
நீறவே யில்லை நினைவுதடு மாறி
யேங்கியே திரிந்தா ரிதமாய்ப் புலம்பி
தாங்கியே கண்டது பொய்யோ யில்லை
நாய்தான் கடித்த வெள்ளெலும் பதுபோல்
பேய்போ லலைந்து பிதற்றித்திரி யாதே
தாயக மாகத் தர்க்கிக்சா தப்பா
வாதத்தை நிறுத்த வண்மையாய்க் கேளு
வெடிசுன்ன வுப்பினால் வங்கத்தை நீற்று
ஆதர வாக வப்புறந் துரிசை
நீதமாய் நீற்று நிலவர மாக
அப்புறம் ரசத்தை யடைவுடன் கட்டு
துப்பறக் கவனந் தோன்றியே நாட்டு
என்றுமே மெய்போ லிசைவாய்ப் பெரியோர்
தன்றுமே மலையிடம் நலமாம் வங்கஞ்
சுன்னமுஞ் செய்வார் சுருக்கமாய் மாநுடர்
ஏங்கவே மூலிகை யிட்டுமே பிழிவார்
தாங்கவே மாநுடர் தலைகெரி யாமல்
வனமூ லிகையில் வகையற நீறக்
கனமாய்ச் சொல்வர் கருத்தைநம் பாதே
நம்பவே யென்ன வென்றது கேளு
உப்புத் திராவக முண்மையாய் நீறின்
அப்பினில் வேதையா மளவுகொள் ளாது
உப்பினில் வேதை யுயருமே பாரு
தப்பியே யுப்பை விட்டா லவன்கையி
லொன்றுமே யில்லை யுறுதியா யெனவே

கொண்டுமே பாரு குணமிலா வாதி
அகண்ட பூரண மடுத்துமே நோக்கு
நிகண்டு பாரு நிலவர மாகும்
அடுக்கு மாறு தலத்திலே நிற்கும்
தடுக்கலே பக்ஷாஞ் சுருதியைப் பாரு
சித்த ருரையுஞ் சிதம்பரந் தன்னில்
பத்தனீ ரேகி முனிவரைக் காணு
சிற்சபை தன்னைச் சிறக்கவே தெரிசி
மாமுனி சொன்ன வாகான கரிசலில்
கோமுனி சூத்திரக் கணக்கையும் பாரே.

**தாம்பிர பஸ்பம் - வண்ணம்,**

செம்பு யேகமுந் தானெடு தகடடி
வம்புலாவியே வெடிபடி கையுமுடன்
நம்பியே திரியரை வளிக்க நீராலே

வம்பு லாவிய நீரது தன்னிலே
தென்ப தாகவே தான்கரி வோடதி
லெம்பிரா னருள் காய்ச்சியே நொய்த்திட
வெட்டை போலாந்

துன்ப மாகவே சினமுமூதிடு
நன்பதாகவே நீறியே சுண்ணமாம்
வன்பதாகவே நான்கினி லொன்றைத்தான்
வீரம்போடு

வன்பு போலவே தான்குழை ரவிதனில்
தென்பதாகவே மேலிடு கவசமாம்
நன்மை யாகவே புடமிடு நடையுடஞ்
சங்குபோலாம்

ஆதியாகவே தாமெனடு பணவெடை
சோதியானதோர் பணமதில் விடவது
வேதியாகவே யுருகிடு மதுபனங்
காய்போலாம்
நாதியானதோர் பணவெடை ரசமதில்
சேதியாகவே யிட்டிட ரசமது
நாதியாகவே கட்டிடு ரசமணி
கவனமாம்
வேதிபேதியாந் தங்கம தாயிடு
மாதிமாமுனி யருளிய கரிசலின்
நீதியாகவே பாகமாய் வைத்திட
குருவதாமே.

**அண்டோடு சுண்ணம், படிக்காரச் சுண்ணம், வெள்ளீய ரசங்களைச்செய்து வேதையாட.**

அண்டோடு அரைத்திடு வெண்கருவால்
கண்டேகரி தன்னிலே யூதிட
வென்றேயினி தானது நீறிடுந்
தந்தம்போலாஞ்
சென்றேயெடு சீனமுமேக மெனை
அன்றே பொரிதானது நீராறும்
கண்டேயரை வெண்கரு தனிலதை
வடிவாகக்
கண்டேயதை கரிதனி லூதிட
தொண்டேயது தான்கடுஞ் சுண்ணமாம்
அண்டோடுட நீறுடனே
யிடைசேரு
தானேஅரை வெண்கரு தன்னிலே
மானேயொரு வில்லையா யூதிடு

தானேயது நீறிடுந் தான்கடுமை
நலமாக
கோனேயிதில் பொட்டலை தாமெனடைசேர்
காமேனயரை வெண்கரு நீரிலேதான்
மானேயிதை வில்லையா யூதிடவே
கொடி தாகுந்
தேனேயெடை வெள்ளியந் தானுருக
மானேயிதை யுருகிட வீந்திடநீ
கானேரசஞ் சேர்த்துமே யந்திடையே
கனிவாகச்
சீனம்வெடியோ டதுதான் திரிநேர்
கானல்படல் தானது வங்கரசங்
தானல்புடல் தான்சரி நேரிடுநீ
யரைஜாமங்
கோனேயென தானதுவில்லையு நேரே
மானேயிதை ரவிதனில் காய்ச்சிடு
வானேயிதை யஞ்சது சுன்னமுமே
பதிமூடு
ஊணேயதை தானது குக்கிடமூங்
காணப்புடம் போட்டிடத் தான்சிவக்கில்
வேணப்படி முன்முறை சுண்ணமிடு
வெள்ளைபோலாங்
காணே யதைக் கண்டிடக் கலியதுதான்
வேணப்படி யாகுமே நீல நீறும்
பொன் ரசங் கட்டிடும்
கவன மேமே மாகும்

அநுபவந் தானது தங்கமாகுங் காணுமே
 லோகமு நீறிவிடுந் தானுஞ்சொற் பார்த்திட
 பாகமது செம்பு நீறும்.

பாகமது இருநூறு அஞ்சதனில்
 யோகம் பரிபாஷையாய்ச் சொல்லிடவே
தாகரச வாதிகள் பாகமது செயமாட்டாது
 ஆகமுனி மாதவர் சொன்ன நீதி
வேகம்பட வைத்திட யிரதமுமே
 யோகம் வரும் ஞானமு மோதிடுமே
 கிரிகை யாமே. 25

**வியாதிகட்கு இலிங்காச பஸ்பத்திற் கநுபானம்.**

இலிங்க பற்பத்தை நினைவாய்க் கொடுக்க
அங்கமாய்ச் சொல்வேன் சூத்திரந் தன்னில்
பேதியே யானால் பெருமையாய் வெல்லத்தில்
நீதியதாக நிமிஷத்திற் பணவெடை
மூன்றுமே கொடுக்க மூதிருமே ஜன்னி
தோன்றியே போகுந் துயரமாய்ப் பாரு
சூசிகா வாய்வு சுகமதாய்ப் போகும்
ஆசையாய் மலஜலம் விடாதே போனால்
வன்னி பஸ்பத்தில் வகையாம் வாளமும்
உன்னியே பத்திற் கிரண்டுமே சேரு
அரைத்துமே பொடியா யதுபண வெடையாய்
நிரைத்துமே கொடுநீ நிஜமதாய்த் தீருஞ்
சூசிகா வாயுவில் சுருக்கமாய் மலஜலம்
ஆசியாய்ப் போனால் அடைவுடன் வாளஞ்
சேர்த்துக் கொடாதே சும்மா கொடுநீ
பார்த்திடும் பண்டிதங் கட்டவும் விடவுஞ்
செய்துமே மருந்து வெவ்வேறு செய்திடு

உடலூறும் வியாதி யுற்றுமே போகுந்
திடமாய் மலஜலந் திட்ட மாய்விடின்
வியாதிகள் போகும் மலஜலம் விடாதால்
வாய்வுக ளுள்ளே மருவியே நின்று
தாயாதி யாகச் சத்துரு பண்ணுஞ்
சோகை தந்த வாய்வுகள் போக
ஆசையி னாலே யடைவுடன் கேளு
அயச்சிந் தூர மறிவுட னடைக்கு
நயமாய்ச் சேர்த்து நலமா யுரைக்க
எட்டுக் கொன்று இன்பமாய் வாளந்
தொட்டுமே யரைத்துத் துயரமாய்க் கொடுநீ
சோகையுந் தீருஞ் சொஸ்தமாய்ப் போகும்
ஆசையி னாலே அறிவுடன் பாரு
சோகையில் மலஜலம் விட்டா லவர்க்குப்
பாகமாய் வாளம் பகரல் சேராதே
காமாலை போகக் கடுகவே கேளு
நேமமாய்க் கீழா நெல்லியின் சாறு
ஆமமாய்க் காற்படி யாவின் பால்காற்
சேர்த்துமே யெடைக்கெடை ஜெயமுள வன்னி
பார்த்துமே பஸ்பம் பணவெடை யிடவும்
ஜாதியா மஞ்சட் காமாலை போகும்
வாதகா மாலை வகையுட னவிழ்தந்
திராம் பஸ்ப மெட்டி லொன்று
வாளமுஞ் சேரு வகையாய்ப் பொடித்து
திரிகடு பொடியிடு திட்டமாய்ப் போகும்
அறிவுடன் வைத்திய மன்பாய்ப் பாரு
ஊது காமாலை யுண்மையா யவிழ்தம்
பேதமாயயக் காந்தசிந்தூர மெட்டி லொன்று

வாளமும் பொடித்து வகையுடன் கொடுநீ
தூளாய் வியாதி துப்பறப் போகும்
பித்த பாண்டு பிரியமாய்ப் போகச்
சித்தமாய்ச் சொல்லுவேன் ஜெயமாங் காந்த
சிந்தூரமெட்டிலொன்று ஜெயமாம் வாளஞ்
சிந்தனை யாகப் பொடித்துமே கொடுநீ
மலஜல மிரண்டும் வகையாய்ப் போகும்
விலகுமே வியாதி விருப்பமாய்ப் பாரு
மகோதரந் தனக்கு வகையாங் குமட்டி
தொகையாய் லேகிய மிரத்தினச் சுருக்கம்
அதிலே பாகமாய் அன்புடன் வன்னி
சதியாய் வைத்துப் பற்பத்தை யுண்டிட
மகோதரம் போகு மயக்கமு மில்லை
தொகையாய்ப் பாரு சூத்திரந் தன்னில்
அட்டகுன் மத்துக் கறிவிப் பேன்பார்
இட்டமாய் வன்னி பற்பம் பணவெடை
தூக்கியே வெடிசுண் ணத்தில் வெல்லம்
பாக்கிய மாகப் பதியக் கொடுநேர்
அன்னஞ் சாப்பிட வரைகிறேன் கேளு
பின்னொரு பாகம் பிழையறச் சொல்லுவேன்
பசுவின்மோ ருபயம் படிபடிவ கடத்தில்
வசிகர மாக வகையா யூற்று
சுக்குடன் பலமுஞ் சுகமாய் நறுக்கு
மிக்கவே கருவேப் பிலைபிடி யாக
இட்டுமே யுப்பு இனமாய்க் கொஞ்சம்
பட்டுவே யிட்டுப் பதிவாய்க் கேளு
ரவிதனி லிட்டு நலமா யரிசி
கவியவே பொங்கிச் சாப்பிட நன்று

பத்துநாள் பொங்கிப் பதியவே யுண்டிடு
சொந்தமு மாகுஞ் சுகமாய்ப் புலத்தியா
புளுக்கைபல் குன்மம் போகவே கேளு
தளுக்கவே வெடியின் தான்கடுஞ் சுண்ணம்
வன்னி பற்பம் வகையுடன் பத்து
வெடியின் சுண்ணம் வகையா யெடைசரி
சேர்த்துமே யெட்டுக் கொன்றிட வாளம்
பார்த்துமே சேர்த்து வகையாய்ப் பொடித்துக்
கொடுத்திடப் புழுக்கை குன்மம் போகும்
அடுத்துமே சோறு பொங்கியே யுண்டிடு
அட்ட குன்மமு மாயிர வாயுகள்
திட்டமாய்ப் போகுந் திருவாம் புலத்தியா
உதிர வாய்வுக ளுண்மையாய்ப் போகப்
பதியாய்த் திரிகடு பதியவே பொடித்துக்
கொடுத்திட மண்டலங் குடிவிட் டேகும்
அடுத்துமே வன்னி பற்பம் பணவெடை
யுண்டிட வுதிர வலியது தீருங்
கண்ட பேருடனே கனிந்துரை யாதே
இடுப்பு வலித்திடி லின்பமாய்க் கேளு
முழங்கால் முழங்கை முதிரவே வலித்தல்
சூலை குடைச்சல் சுத்தமாய்ப் போக
வாதக் கடுப்பு வகையுடன் தீரச்
சீனப்பல மைந்து சித்தமாய்க் கேளு
அன்பாய்ப் பொடித்து அதிலிடு மருந்து
கேள்திரி கடுவகை திட்டமா யிளவறு
அறிவுட னதிலிடு வாகா யொன்றாய்
வெருகடி யெடுத்து விதமா யுளங்கை
தனிலிடு நெய்யிடு தக்கதோர் வன்னி

பற்பம் பணவெடை பதிபவே வைத்துத்
தாபரமாகத் தாகமாய்ப் பத்து நாள்
உண்டிட் டிருநீ புண்மைபா யிளைத்துக்
கண்டிடு உடல்தான் கனத்துமே போகும்
பத்தியங் கேளு பழஞ்சோ றதுஞ்
சத்தியாய் நல்லெண் ணெய் கானே யாகும்
வாய்வுத் தீனி வசமாய்த் தள்ளு
கசப்பு மாகா கத்திரி கூட்டு
இசைவாய்ப் பாரு இருந்திடம் விட்டுப்
போகுமே வலிகள் போக்கோடே பாரு
கரணங் தப்பினால் மரணம் வந்திடுந்
தருணமாய்ப் பாரு தர்க்கஞ் செயாமல்
மலமடைப் புக்கு ஆகவே முன்சொன
பலனதைப் பாரு பிரட்டுசெய் யாதே
கிராணிக் கெல்லாங் கபாடஞ் சொன்னேன்
திராணியால் வன்னிபற் பத்தில் வைத்துச்
சாப்பிடக் கிராணிபோந் தடையறப் பாரு
வாலமாய்க் கண்டால் வகையுடன் சொலக்கேள்
வன்னி ரசத்தை வகைபா யெடுத்து
வுன்னியே திராவக மதிலிடு வெண்ணெயாம்
வெண்ணெயைக் குன்றி மணிபோற் குச்சியில்
நன்னய மாக வழித்துமே கேளு
முளைக ளுள்ள மூலக் கிராணி
தனையாய் முடிக்கச் சொல்லவுங் கேளு
வெளிதனில் மூளைகள் விட்டுமே வந்திடுங்
களையா யதிலே கனிவாய்க் கொஞ்சம்
பூசிடப் பாகமாய்ப் பிரிந்துமே யொருநொடி
ஆகிடக் கரையு மதுநல பாகம்

கரைந்துமே போனால் கனிவா யெருமை
விரைந்துமே தயிரை யூற்றியே பிசைந்து
கட்டநீறுங் சனமாய்ப் பாகமாய்த்
திட்டமாய்ச் செய்து திடமாய்ப் பாரு

**சண்டரச பஸ்பம்.**

சண்டரச பஸ்பந் தகுந்தபே ரேது
பண்டாய்ச் சொல்வேன் பதிவுடன் புத்தியாய்
லிங்க வாலை ரசமது வாக்கித்
துங்கமா யுப்பி லெரித்திடப் பற்பம்
இதுதான் சண்ட ரசபற்ப மாகும்
எதுவிது வென்று ஏங்கி யிராதே
வியாதிக ளறிந்து வினவியே செய்து
பலாபல மாகப் பகர்ந்துரை புலத்தியா
குறிப்புடன் பாரு குணமாய் வியாதி
தெறிப்பாய்ச் சொல்லித் திட்டித் திரியாதே
லிங்கத்தைப் பாரு நினைவா யுனக்குத்
துங்கமாய்ச் செலவுக்குத் தருவார் சிவனும்
வயித்திய சிரோமணி வாகாய்ப் பேர்வருந்
தயித்தியர் போலத் தர்க்கம்பே சாதே
தென்பொதி கையினில் திட்டமாய் வாசமாய்
அன்பதாய்க் கரிசலை யாராய்ந் தெடுத்துப்
பாக மநுமதி பாகமு மெடை வகை
தாகமாய்ச் சொன்னது சரிகா ணிதுநலம்
முனியரு ளியதை முடிவறப் பாரு
தனிகை பாகமாய்த் தடையறச் செய்வதே.

## தங்காசச் சிந்தூரம்.

ஜெயவன்னி ரசமெடு செப்பத் திராவகம்
நயமாய்விட்டு நலமதாய் மூன்று நாள்
வைத்திடப் பூர்க்கும் வளமாய்க் கேளு
நைந்துமே பூர்த்த வெள்ளையு மேகம்
ரேக்குத் தகடது நிரையா மேகந்
தாக்குமே யிரண்டுந் தடையற வரைத்து
வாக்கதாய் ஜாம வகைபனி ரண்டு
உருட்டியே வெற்றிலை யுள்ளே வைத்து
நெருக்கியே யுண்டை ரவிபட வுண்டையை
பெருக்கியே மேலே வெற்றிலை யுள்ளே
பொதிந்து மணலது சலங்கை மண்ணை
யெடுத்துக் கனல்நடு வைத்துக் கனக்கவே
யுண்டை மேலிடு மண்ணை விருப்பமாய்க்
கொட்டி யதன்மேற் புடமிடு கொஞ்சந்
தாக்கக் கதிபெற கனயாய் மஞ்சளாம்
எடுத்துமே கணபதி பூஜையும் பண்ணு
தடுத்துமே ஓம்நம சிவாய மெனச்சொல்
என்றுமே நூறு உருவது ஜெபித்து
நன்றுமே ரவியில் நாற்பதி லிரண்டரை
கொடுத்திடச் செம்பு குணமா யெட்டரை
அடித்துமே நின்று ஆடியே நிற்கும்
எடுத்துச் செலவுசெய் யின்பமாய்ப் பாரு
அடுத்துமே ஞானம் யோகம் பலித்திடுந்
தங்கமும் பண்ணு ரசமது வித்தை
யிங்கிதமாகு மினிய புலத்தியா
உப்பு காவிக் கோடாப் புடமுந்

தப்பியே போகா தனைவழி பாரு
சிந்துரங் குன்றி யெடையிடு உடலில்
சிந்தையாய் மேனி சிறக்கவே கற்றாண்
ஆகுமே கண்தா னல்லிப் பூப்போல்
ஏகுமே மேனி யினியசுகந் தம்பூ
மேலது மாந்தளிர் போல மேனியாங்
காலது வைரங் கனகம் போலாங்
கற்றா ணுருங் கனக சிந்துரங்
கைப்பும் புளிப்புங் கனமாய்த் தள்ளு
மெய்ப்புடன் மண்டலம் மெய்ம்மையா யுண்ணு
ஆவின் பால்சே ரடைவாய் நெய்யும்
ஓயாமற் சேரு காந்த வரையில்
மாயா தேகம் வலுவாய் நிற்கும்
வாசி யிறுகும் மாமதஞ் சிந்தும்
ஓசையா யொளியு முடலிலே யாகுந்
தின்றிடக் கற்ப மழியாத் தேகம்
வின்றிட வானோர் விருப்பமாய்ச் செய்வார்
கண்டுமே யுற்றுக் கருணையாய்ச் செய்யப்
பண்டுமே சித்தி பதிவாம் நிரையாம்
நிரையாந் தங்கம் நேராம் லிங்க
மரையாது செய்தா லதுபல னுருங்
காய மிறுகுங் கல்லது போலாம்
மாயமாய்ச் சொன்னால் மயக்கம் வந்திடு
மிப்படிச் சித்த ரியல்பா யுண்டு
தப்பித மாய்த்தான் மூலி யுண்டென
வென்றுமே பொய்க ளிதம்பெறச் சொல்வார்
நன்றுமே சிஷ்யர் மூலிகை தேடி
அலைந்து அலைந்து யதையுண் டென்று

சூலைந்துமே தேகங் கெட்டது போகும்
பொய்சொல்லி விட்டால் பேதமாய் வந்திடும்
மெய்யிது சுருக்கம் வினவினேன் பாரு
சித்தியா யோகத் திருக்கவே சொன்னேன்
பத்தியாய்த் தங்கம் லிங்கம்பாரு
ஆப்பிடா விட்டா லதுவே தென்றால்
கூப்பிட் டயத்தைக் கொடியசிந் தூரமாய்ப்
பண்ணியே யுண்ணு பதிவுட னப்படி
யெண்ணமாய்த் தேக மிணிதாம் பாரு
லிங்க ரசத்தை நினைவுட னெடுத்துத்
தங்கமுஞ் சேர்த்துச் சாத்திடிற் சிந்தூரஞ்
செம்பது பழுக்குஞ் ஜெயமுள புலத்தியா
ஏமமு மில்லா தெளியவ னானல்
காந்தமு மயமுங் கருணையாய்ச் சரியெடை
சேர்த்துமே பவழ மாக்கிடு லிங்கம்
வால ரசமெடு வாகாய்த் திராவகங்
கோலமாய் விட்டு ஊறிடச் சேர்த்தரை
சிந்தூரஞ் செய் சாப்பிடு முன்போல்
முந்தவே சொன்ன தேகமு மாகும்
மாமுனி பொதிகை வாழ்முனி யுண்டது
பாதகம் போல்வடி வான தேகமாஞ்
சிந்துர மாகும் ஜெயமுள பாதை
தங்கம்போல் வேதை தாக்கிட வயமும்
இங்கித மாக வரைந்தனர் மாதவ
முனியருளிய சொல் முடிவதாய்ச் செய்யே. 27

## சௌக்காரம்.

ஆதி சிவனருள் பெற்றவம் மைக்குச்
சேதிய தாகஜெயசௌக்காரம்
வரையறை யாக வகுத்துமே சொன்னது
உரையா யம்மை யுறுதியாய் நந்திக்கு
முறையோ டேசொல முடிவாய் நந்தி
அகத்தியர்க் கருள அகத்தியர் புலத்தியர்க்
ககத்துடன் சொல்ல தக்க புலத்தியர்
மூலர்க்குச் சொல மூலர் கொங்கணர்க்
கருளவே கொங்கண ரன்பாய்ப் போகருந்
திருவாய்க் கேட்டுத் திரமாய் நிகண்டாய்ப்
பாடியே குகையில் பதிவாய் வைத்திடத்
தேடியே மச்ச முனியெடுத் தப்புறம்
நவமாய்ச் சித்தர் நலமாய்ப் பார்த்துக்
கவனமாய்ப் படித்துக் கருதிட வாயிரத்
தெழுநூ றதனிற் பாடிப் படிக்கத்
தயிலங் களங்குசிந் தூரமும் பார்த்து
அயிலமா மெழுகு அடைவுடன் கண்டுத்
திட்டமா யிருக்கும் ஸ்திரமாம் வேதை
இருக்கின்ற தென்று இன்பமாய்ப் பார்த்துச்
சௌக்கார மட்டுஞ் சரியாய்க் கிளையும்
என்றுமே வகத்திய ரின்பமாய்ச் சொன்னார்
கண்டுமே மச்ச முனியவர் களித்துமே
எண்ணெயை விட்டு வாங்கவே பாடிக்
கோத்திடப் புத்தகங் குணமுள சித்தர்
யாவரு மறி யெண்ணெயைப் பாடவுந்
தலைகா லாகப் பாடியே கோத்தார்
சூத்திரந் தன்னிற் சுயம்பெறச் சொல்வேன்

பார்த்துமே சௌக்காரம் பண்புடன் பாரு
பூநீர் விளையும் பொட்டில் பாரு
தானது வடிமிற் கல்லுகள் மெத்த
உண்டுமே வெட்டி யுண்மையா யெடுத்துக்
கண்டுமே சமுத்திர நீரதில்விட்டு
எரித்திடச் சுத்தி யினியதோர் கல்லைச்
சரித்துட னெடுத்து தானேந்து மரக்கால்
பெரியதோர் காள வாயிலே வைத்து
விரிபெற நீற்றிடு விதமுள பாணியை
விட்டுமே மண்டலம் விதமாய் வைத்துக்
கெட்டியாய் மேலே தெளிவையும் பார்க்க
அடைபோ லுப்பாம் அதைவழி பீங்கான்
கோடையி விட்டுக் குணமாய் ரவியில்வை
காய்ந்து எண்ணெயுங் கக்குமே பாரு
கல்லுப்புச் சொல்வேன் மு த்துடன் கேளு
நல்லொத்த வாருதி நாதமு மாச்சுக்
கடல்நுரை கல்லுங் காண வெடுத்துத்
திட்டமாய்ச் சுக்கான்போல் நீற்றியே யெடுத்துக்
கல்லுப் பவ்வெடை கணக்கா யளந்து
வெல்லுமே யிரண்டையும் விருப்பமா யரைத்துப்
புடம்பெரி தாகப் போட்டெ டுத்திட
மாதா பாணியால் கரைத்துமே பீங்கான்
இட்டிட வுப்பா மினிய புலத்தியா
கெட்டியா யெடுத்துக் கிருபையாய்க் கேளு
சீன மூதி சிறப்புடன் சுண்ணமாய்
வான் மீன் போலச் சுண்ணமு மாகும்
எடுத்துமே யப்புற மினிரச வாதிகேள்
அடுத்துமே யெல்லாஞ் சேர்க்கிற பாகந்

கேளுமே சுக்கா நீறுப்பு நான்கு
வாளுமே கடல்நுரை யுப்புமே யொன்று
சீனச் சுண்ணஞ் சிறப்புட னொன்று
தானமாய் மூன்று முப்பு வாச்சு
எடுத்துமே பீங்கா னியல்பெற விட்டு
அடுத்துத் திராவக மதுமூன்றுஞ் சேர்த்ததில்
ஒன்றுக்கு நான்கு திராவகம் விடவுங்
கண்டுமே கேளு கருத்துடன் பாரு
வெடியுப் புத்தசம் விருப்பமாய்ச் சீனங்
கடிசே ரிருபத் தைந்துமே சேரு
கடமதி விட்டுக்கிளரவே திராவகம்
வடித்துமுப் புவில் வாகா யிட்டுக்
கொதித்திடப் பொங்காமல் குணமாய்க் காய்ச்சி
அடியாய் குளம்பா மப்பரு வத்தில்
சாம்பலைப் பரப்பி ஜலுதியாய் மேலே
துணிவிரித் தன்மேல் துடியா யூற்றி
உண்டையாய்ப் பண்ணி யுறுதி புலத்தியா
ரவியிலே காய நலமாய் வைத்து
ஐந்துசுண் ணத்தி லடைவுட னெட்டுப்
புடமிடு கோழி பின்பு எடுத்து
முப்பு எடையாய் மூன்ரச பற்பம்
நப்புடன் சேர்த்து நலமாய்ப் புகைநீர்
விட்டு அரைத்து வில்லையாய்ப் பண்ணி
கட்டுமே ஐந்து சுண்ணத்தில் வைத்து
லகுபுட மிடுபே ரான வழலையாங்
திடமதாய்க் குருவாங் திட்டமாய் முப்பாங்
திருசௌக் காரமாங் திருநட மாதியாம்
ஆதியாய் முடியா மாதி நடுவாஞ்

சாத்திரந் தன்னிற் சலிப்புடன் மறைத்துச்
சூத்திரந் தன்னிற் றிறந்துநான் சொல்வேன்
சித்த ரெல்லாஞ் சிறப்பாய் மறைத்தார்
பூநீர் வாரி புதுப்பாண் டத்தில்
இட்டுக் கரைத்து இதமாய்நல் லெண்ணெய்
விட்டுமே வாங்கச் சொன்னார் பாரு
வாதிகள் கரைத்து வகையாய்நல் லெண்ணெய்
யூற்றிக் குழப்பி யெண்ணெயை வாங்க
வாரா ததனால் வகையிலா வழலை
சேராப் பேருடன் சேர்ந்துமே பிள்ளை
எடுத்து வந்து இதமாய் மண்டையை
விட்டுமே வழலை பிரபல மாகவே
யிதுதான் வழலை யெனச்சொல்வார் வாதி
யொன்றையொன் றுய்நினை ந் துருகுவார் வாதி
கண்டுமே சித்தர் கருவை மறைத்தார்
வழலை யிதல்ல வாகான முனியே
சொன்னதைப் பாரு சுயபா ஷாண
மெல்லா நீறு மின்பமா யுபரசம்
வெல்லவே நீறும் விருப்பமா யுப்பு
இருபத் தைந்து இன்பமாய் நீறுந்
துருசது நீறத் தொகையது கேளு
வரிசையாய்த் துருசு பலம்பத் தேகம்
நிறுத்துமே வைத்து நினைவுடன் கேளு
விருத்து சௌக்காரம் புகைநீர் விட்டுக்
குழைத்து மேலே தடவு நீயுங்
கட்டுமே நீறுங் கவாது கோடி
வெள்ளி யம்மேல் விருப்பமாய்த் தொட்டுத்
துள்ளியே கொட்டுப் போடவே நீறும்

வெங்கல நீறும் விதமினி யென்சொல்வேன்
தங்கமு நீறுந் தானேபா ஷாணம்
இங்கித மாக வியல்புட நீறும்
அடியு முடியு மநாதியு மிதுதான்
வழலைச் சுண்ணம் பொய்யென்பர் லோகர்
நிழல்போற் றெரியு நேராம் பாகம்
முத்தியாய்ச் செய்து முனியது பாரு
சித்தர்கள் மறைத்த திறமை யிதுதான்
சுருக்கைப் பார்த்துச் சுருக்கமாய்ப் பாரு
இப்படிச் செய்தால் வழலை முடியும்
முடிந்தது வழலை முதன்மையாய்ப் பாரு
முன்னே யயத்தை முடிவாய்ச் செம்புபண்
பின்னே செலவு பிரித்துட னெடுத்துச்
சௌக்கா ரப்பஞு ஜனுதியாய் வங்கம்
நலமாய் நீற்று நல்லதோர் தூருசைப்
பாகமாய் நீற்றிப் பதியவே ரசத்தை
யோகமாய்க் கட்ட வொக்கவே நீறும்
ஒன்பது லோக மொக்கவே பாய்ச்ச
இங்கித மாக ஆகிடுந் தங்கம்
இது தான் பாதை யிப்படி வெகுவிதம்
முதிரவே யொன்று முடித்து எடுத்திடு
தென்பொதி கையில்வளர் சிறந்த தமிழ்முனி 2
இந்நவ கோடி சித்தர்க்கறி வித்ததே.

**அயச்செம்பு-வேறு.**

சுத்திய தயப்பொடியு மேகநிறை யாகுஞ்
சுகமான வெண்காரி பாதியென லாகும்
மத்தினிய செவ்வல்லி சாற்றிலரை யுருக்கு
மணிசிறிய பயறளவு மணியா யிறங்கும்

சிக்கென வெடுத்துநிரை பாதியிடு காரி
ஜெயமா யரைத்துமே யைம்முறை யுருக்கு
மைக்கினிய கருமணிபோ லுருகுமது மணியாய்
மயமான விபாமினி சொல்லுவது கேளே. 29

கேளுமே கால்வாசி வீரமது கூட்டு
கெடியான புகைநீரி லரைத்துவில்லை பண்ணு
தாளுமே புடம்போடு எடுத்தரைசெய் யுண்டை
தானேதான் ரவியிலிடு காயவை மேலே
காளுமே கெந்தியது முக்காலும் பண்ணு
கனிவாக அரைநீரா லரைஜாம மேகம்
வாளுமே யுண்டைமேற் கவசமது கட்டு
வகையான சுண்ணாம்பு மேலிடவே கேளே. 30

கேளுமே மண்கவச மதின்மேரி லிட்டுக்
கெடியான ரவிதனிலே காயவே வைத்துத்
தாளுமே பொடியாக பெருவதனைப் போடித்துத்
தக்கதொரு புடம்பெரிதாய்ப் போட்டுமே யெ
[டுநீ
வாளுமே முசைதனி லுருக்கிடவே கேளு
வகையான ரவியெடுநீ பாருமே மேலுந்
தாளுமே மதியெட்டில் கொடுத்திடவே கேளு
தக்கவய தாகுமே சொன்னரவி பாரே. 31

பாருமே யிதைவைத்துச் செலவுதான் செய்து
பண்பாகத் தவத்தோர்க்குத் தொண்டுமே பண்
சேருமே மலைகளிலே சஞ்சரித்துப் பாரு [ணு
ஜெயமான சித்தர்களை வணங்கிநீ கேளு
சாருமே வெகுவித்தை வந்திடுமே சித்தி
சதகோடி விதிகோடி சத்துமஹா கோடி

ஏருமே யுழுதாலோ வேளாண்மை யாகு
மிதமான ரசவாதஞ் செய்துமே பாரே. 32

### கெந்தகசுத்தி மாத்திரை.

கெந்தக சுத்தி கிருபையாய்க் கேளு
நந்தி சொன்னதை நாடியே பாரு
நாத்தங் தசமெடு நாடியே யரைக்கப்
பார்த்துமே சீனம் பதினாறு பலமிடி
யுடைத்துமே சட்டியி லுண்மையா யரையிடு
படைத்துமே வாலை பதியவே மூடி
உளுந்துமண் சீலை யுண்டையாய்ச் செய்து
அழுந்தவே திராவகம் அடைவுட னிறங்கும்
வெள்ளைநீ ராகும் வெண்ஜலம் வருகுங்
கள்ளமா யெடுத்துக் கனகமாய்க் குப்பியி
லடைத்துமே வைத்து அடைவது கேளு
துடைத்துமே கெந்தியி விட்டுமே யரைவி
காயமே வைத்துக் கனிவாய்க் கேளு
தாயக மாகத்தாக் காவின் பாலை
வாய்ப்பா யரையிடு வகையாய் மேலே
தூசணி வித்துத் துப்பற வாகப்
பாசமா யதன்மேற் பரப்பியே கெந்தியை
மேலே கடத்தை விருப்பமாய் மூடி
எரித்திடப் புட்டாய் யின்பமாய்க் கேளு
பரித்த வடியிற் பரிவாய்த் தீயெரி
எரித்திட மணியா யின்பமா யிறங்கும்
பாகமா யெடுத்துப் பதிவாய் முன்போல்
ஏகமா யிப்படி ஐந்து முறையும்
பண்ணிடச் சுத்தி பழைம தாகும்

எடுத்துமே ரசமெடை யின்பமாய்ச் சேர்த்து
அடுத்து அரைக்க அதுசரி யாகுங்
களங்கமு மாகுங் கரியையெரி யாதே
வளங்காண் வியாதி வடிவுடன் கேளு
இரண்டுமே நின்ற நிறைக்குமே வாளங்
கண்டுமே யரைக்கால் கனிவுடன் சேரு
அரைத்துமே களங்கா யதிலொரு பணவெடை
நிரைத்துமே தேனில் நிண்ணய மாகவே
யுண்டிட மண்டல முற்றுமே வியாதிகள்
கண்டுமே யொளிக்குங் கவலைப் படாதே
எவ்வெவ் வியாதி கணக்கது கேளு
சுந்தர மான வாத மெண்பது
போகுமே முனிவர் பொருந்தியே சொன்னார்
பித்தமு நாற்பது போந்துமே போகுஞ்
சிலேத்பன மெல்லாந் திட்டமாய்ப் போகும்
வாதமும் பித்தமும் பருவமே போகுந்
தாதைபோ லவிழ்தந் தந்திட நோவு
தவிடு பொடியாந் தக்கதோர் பத்தியஞ்
சுவதே தேகங் கணக்கது கேளு
சூலைவிப் புருதி தோன்றியே யொளிந்திடும்
வாலையு மாவார் வடிவது மெத்த
குட்டம்பதி னெட்டுங் குறைநோய் போய்விடுந்
திட்டமாய் ஜன்னி போகுமே யொருநொடி
கண்கள்செவ் வலரிப் பூவது போலாம்
புண்கொள் வியாதி காட்டப் போய்விடும்
எங்கள் குலத்திற் கிதுகா னவிழ்தந்
தங்கம் போலாந் தக்கதொரு மேனி
ஈளை யெலிகடி எகமே கேளு.

### தாளகச் சிந்தூரம்.

காலைபோல் தாளகங் கனிவாய்ப் பொடித்து
மூன்ரச செந்தியில் முக்கிய மாகத்
தண்மையா யுருக்கித் தாளக மோடு
கிண்டிடு குப்பியில் கிருபையாய்ப் பவழமாந்
தொண்டுசேர் பணவெடை திரிகடு தனிவிடு
க்ஷயமுத லெல்லாஞ் சலிப்புடன் போகும்
பயமிலைத் திரிநாள் பத்திய மாகச்
செலுத்திட க்ஷயமுந் திட்டமாய்ப் போகும்
வலித்திடு நோய்கள் வலிப்புடன் போகும்
எலிகடி நீங்கு மெண்பது வாய்வறு
மண்டலி கடிகள் வலிப்புடன் போகுங்
கண்ட பொழுதே கருணையாய் நீங்கும்
இப்படிக் களங்கி விதமாய் வெகுநோய்
அப்படித் தீரு மதுபல னாகும்
பவுத்திர மெல்லாம் பதைப்பற் றோடிடுங்
கவுத்துவம் போலக் கருணையு மாகும்
போகமு மாகு மிருந்திடந் தனிலே
பாகமாய்ச் சோறு பதைப்பற வந்திடும்
ரவியில் நூறு கொண்டிடச் சொன்ன
கனியவே போக ரேழாயிரஞ் சொன்னு
ரதையறிந் திட்டா லதுரவி பழுக்குஞ்
சிதையறி மேனி செங்கதி ராகும்
வகையாய்க் கரிபோ லாச்சுதே யென்று
தொகையாய்ச் சொல்லிச் சோம்பித்திரி யாதே
சிவனுடை விந்து ரசத்தைக் கூப்பிடு
அழைத்துத் தவமா யென்னைரட் சியுமென்று

தேவியே கெந்தியே திட்டமா யெனக்கு
ஆவலா யருள வென்றுமே கேளு
சகலமுங் கொடுக்குஞ் சமுசய மில்லை
மூலக் கிராணி சோகையு நீங்கும்
வாலையாய் மேனி வடிவுற வாகுந்
தங்க மாமவர் தவம்புரிந் திடுமுனி
உங்களுக் காக உறுதியாய்ச் சொன்னதே 34

**அயச்செம்பு தங்கநாகஞ் சேர்த்துச் சிந்தூரம்.**

அயத்தின்செம்பு தானெடுத்து ஆனநான்கு யுகமதா
மாதியொன்று தங்கநாக மானநேர்கொ ளளவெடை
தயத்தின்ரெண்டு சேர்க்கவஃது தானெபிட்டு வெள்ளை [யாந் [னில்
தக்கபிட்டைத் தானெடுத்துத் தானேமுன்பு ரவித
கயத்தினோ தாயுருக்கிக் காணநான்கிற்கொன்றுமே
காதலா யுருக்குசேர்பின் காதலா யுடைத்துமே
பயத்தினெரு ரசமொர்பாக மாகவேயக் கெந்திநேர்
பக்குவம்ம தாய்நிறுத்துப் பாகமா யெடுத்திடே.
எடுத்துமே யரைத்திடாய் கரிசலையிற் சொன்னது
ஏகமா யரைத்துரவி தன்னிலேவை பவழமாம்
அடுத்துநூறு செம்புதன்னி லாண்மையா யுருக்கியே
யாதியொன்று தாக்கிட வணைத்திடவே தங்கமாந்
தொடுத்துரச வாதந்தானும் தொன்மையாகநன்மையாம்
சோதியாதி பேதியாஞ் சுகந்தவர்ண மாற்றுமே
கடுத்துமே அகத்தியர் கனிந்தயச்செம் பதனையே
காதலாய்ப் புலத்தியர் களிக்கவே யுரைத்ததே. 35

**அயபஸ்பம்.**

வேம்படி தன்னில் விரும்பியே சொல்ல
அம்மையு நந்திக் கருளிய வாதம்

செம்மையாய் வைத்தியந் தீர்க்கமாய்ச் சொல்ல
நந்தியு மசுவனி தேவருக் கருளப்
புந்தியா யசுவனி புத்திய தாகத்
தன்வந் திரிக்குரை செயத்தன் வந்திரி
வன்மையா யகத்திய வடிவார் முனிக்கு
நன்மையாய்ச் சொல்லிட நாடியே யகஸ்தியர்
புலத்தியர்க் கருளின பெரிய கரிசலை
சூத்திர மாக முப்பத் தாறில்
அயபற் பந்தனை யறிவுடன் கேளு
நயமதாய்த் தந்த ஜடநீ ராலே
மூன்றுநா ளூற முக்கிய மாகவே
நன்றாய்ப் பாணியால் நலம்பெற வரைத்துக்
கரைத்துமே பின்னர்க் காணவே கேளு
யரைத்திடப் பண்ணை யதிலரை யிடுநீ
நிரைத்துமே வீழி வேர்த்தோல் பட்டை
சீவியே யிடித்துச் சிறக்கவே பிழிந்து
ஆவலா யரைத்து யதிலிடு புடமுந்
திரிநே ரிட்டுத் திட்டமா யெடுத்து
அறிவுட னயத்தி லரைவாசி வீரஞ்
சேர்த்துமே வீழிப் பட்டைநீ ராலே
பார்த்து அரைத்துப் பதிவுட னெட்டுப்
புடமிடு நீறும் பெரிதா யயமுந்
திடமதாய் வெள்ளையாய்த் திட்டமாய்ப் போடு
வெள்ளை யாகு மட்டுமே புடமிடு
கள்ளமில் லாமற் கனிவாய்ப் புடமிடு
வல்லமை போவில் லாதே போனால்
நடமதாய்க் கரியில் வைத்துமே யூதிடு
வெள்ளை யாய் நீறும் விருப்பமா யிப்படித்

துள்ளவே செய்தால் துடியாய் நீறுந்
தங்கமு மிப்படி தானவ லோகமு
மிங்கித மாக இட்டிட வெள்ளையாம்
பாடது படாமற் போனால் நீறு
வடது பொய்யா மினிரச வாதிகேள்
முடிவினிற் சொன்னேன் முக்கிய மாகத்
துடிகொ ளயநீர் பணவெடை மண்டலங்
கொடுக்க வியாதிகள் குறைநோய் குட்டம்
அடுத்துமே போகும் பாகமாய்ச் செய்து
இப்படிச் செயிலய மியல்பாய் நீறுந்
தப்பியே போனால் தானென் செயலாஞ்
சாத்திரம் பொய்யாஞ் சவங்கிடேல் கேளு
பாத்திர மாகப் பரிவாய்ச் செய்தால்
விருப்பமாய் வேலைசெய் வேலைகள் வாதமாம்
ஆலைகள் போலவே யலைந்தால் பயனென்
அயமது பற்பம் ரவியினி லிட்டிடக்
கனியவே யெட்டரை கனிவா யாணியாம்
வரிக்கி வரிநான் சொலமுடி யாது
புத்தியாய்ச் சாத்திரம் பொறுமையாய்ப் பாரு
சத்திய மாகச் சாற்றினேன் கரிசலை
முப்பு விபரம் விதமா யிதுதான்
ஏரு உழுதா விதமாய்ப் பயிராந்
தார்க்கோல் போட்டால் தகுதியாய் காளை
நடக்கும் பாரு நலமாய்ச் சாத்திரம்
வடநூல் கிரந்தம் வண்மையாய்ப் பார்த்துக்
கரிசலில் சொன்ன கணக்கையும் பார்த்துச்
செய்தால் பலனும் சித்தமாய்ப் பாரு
வையகந் தன்னில் வகையாய்ப் பிழைநீ
பையவே செய்து பதிவுட னில்லு

பாகமாய் நிரைகள் பக்குவந் தப்பினால்
ஏகமும் போகு மெடுத்துமே பாரு
ஏதனாற் பார்த்தா லெரிபுடந் தப்பும்
மெத்தவே சொன்னேன் முறைபோல் பாரு
வாளமில்லாமல் மருந்துகள் செய்தால்
தேளாம் வியாதிகள் திட்டமா யேகா
பாகத் துடனே பதியவே நிறையாய்
யோகமாய்ச் செய்தா லொழுங்கது வாகுஞ்
சித்தர் மறைத்த சிறப்பையுஞ் சொன்னேன்
சாதனை யாகத் தர்க்கம்பண் ணாமல்
போதனை யாகப் புத்தியாய் விசாரி
எப்படி யெல்லா மின்பமாய் வருகுஞ்
சொற்படி தப்பினால் சுருக்கமும் பொய்யாம்
நற்கட லதனை நலமாய்க் குடங்கையி
லேற்கவே யுண்ட இனிய மகாமுனி
சொன்னது சூத்திரஞ் சுருக்கமாய்ப் பாரு
இந்நிலந் தன்னி லெடுத்துரைப் போரே
பாடினேன் பாகம் பரிவுடன் பார்த்துத்
தேடியே நின்றால் திறமுடன் செய்தாற்
பலக்குமே வைத்தியம் பண்பாய் ஜீவனம்
வலுக்குமே யாகும் வடமொழிக் கிரந்தம்
பார்த்துமே படித்துப் பதிவுடன் சொன்னேன்
சேர்த்துமே பாரு திட்டமாய் வாதமா
மயத்தையே கூப்பிட் டடியேற் கருளெனத்
தயவாய்ச் சொல்லு தவப்பலங் கொடுக்கும்
ரசத்தையு முழைத்தே நயமுடன் வாதம்
பிசகறக் கொடுக்கும் பிரபல மாக
வுப்பையு முந்த உண்மையாய்ப் பாரு

அப்பிறு னுப்பையு மடைவாய்க் கட்டு
உப்புச் சுண்ணம் உண்மையாய்ப் பண்ணு
மெய்யுடன் மூலிகை தன்னிலே யிட்டுக்
கைப்பிடி யாகக் கசக்காது கட்டு
வேறுமூ லிகையில் விரும்பிநில் லாதே
தறுகுறும் பனைப்போல் தர்க்கம்பே சாதே
நாய்கள்வெள் ளெலும்பு நலங்கியே கடித்தால்
மாயமாய்த் தன்கடை வாயி லிருந்து
ரத்தம் வருகும் நினைவுட னக்கும்
மெத்தவே எலும்பி லிருந்தவா றதுபோல்
சித்தமாய் நினைக்குந் தெருநா யதுதான்
அப்படிப் போல வாகுமே மூலிகை
சொற்படி போலத் துரிதமா யுப்பை
முந்தியே சுண்ணம் பண்ணியே மூலிகை
சிந்தனை யாகச் சிறப்புட னிட்டுப்
பிழிந்திடச் சாற்றில் பெருமையாய்ச் சரக்கைக்
கழிந்திடக் கட்டு லோகந் தங்கமாம்
உப்பை விட்டா லுண்மையாய் மூலிகை
தப்பாய்ப் பார்த்தால் தானே யுதைநீ
திட்டாந்தஞ் சொல்வேன் செல்வ புலத்தியா
முட்டவே காய முறுதிகா ணுப்பு
இதையறி மனத்தி லின்பமாய்ப் பாரு
அதுவிது வென்று அலையவே வேண்டாம்
உபதேச மாக வுண்மையாய்ச் சொன்னேன்
நிஜமாய்ச் சூத்திரம் நிண்ணயம் பாரு
தட்டான் வைத்த தாயார் தன்னை
யிட்டமா யுறுதியா யின்பமாய் நினைநீ
வாதத்தை முன்னே வகையுடன் பண்ணு

நீதமாய்ப் பசுக்கள் நிச்சய மாகுஞ்
செய்துமே மோட்ச கதியடை நாளும்
பையவே தேகம் பதிவாய்க் கற்பமா
முண்டிட நிறுத்து உண்மையாய் நீற்றுங்
கண்டபே ருடனே கருச்சொல் லாதே
துரிசது நீரால் தொகைரசங் கட்டும்
வரிசை யாகக் கவன வழியது
வாதஞ் செய்தால் வரிசையாய்த் தங்கம்
பாதையாய்ச் செய்தால் பலனது உண்டாம்
அயத்தின் செம்பை யடைவுட னெடுத்துப்
பிசகிலா ஜீவனம் பண்ணியே யெல்லா
நயமதாய்ப் பாரு நாடி புலத்தியா
தனியே யிருந்து தாட்டிக வாதம்
பாரினி லென்ன சொல்வேன் பரிந்து
இதையுஞ் சுருக்கிக் கரிசலைப் பாடினேன்
இதையுஞ் சுருக்கி இனமுப்பத் தாறுஞ்
சுதையாய்ப் பாடினேன் சூத்திரம் பாரு
சாத்திரமெல்லாந் தடையறப்பாரு
சூத்திர மகப்படுஞ் சுருதி புலத்தியா
கேள்வியி னாலே கெடிபெறச் சுட்டுத்
தாழ்வாய்ப் போகத் தப்புநினை யாதே
மனிதர்க ளெல்லா மாயா மலத்தர்
தனியே சாத்திரந் தடையறப் பார்த்துச்
சுட்டா லபிக்குஞ் சுடாவிடில் வருமோ
கட்டாய மாகக் கனிந்துமே சாத்திரந்
தேடியே பாரு செல்வ நிலைத்திடுங்
கூடியே சரக்கில் குறிப்பை யறிநீ

## யூகிமுனி கரிசலை - 36.

எல்லா மறிந்து இன்பமாய்ச் சோதி
சொல்லாற் பெரியோர் சொன்னது புத்தி
சமுத்திரந் தன்னைத் தான்குடங் கையில்
அணைத்துமே வாங்கி யதையுண் மாமுனி
சொன்னது சூத்திர முப்பத் தாறுமே
நன்னய மாக நவிலவே பாரே.

யூகிமுனி கரிசலை - 36
முற்றுப்பெற்றது.



வாலைமனோன் மணிபாதம்
சீலமுடன் தினம் வாழ்க.

ஓம் தத் ஸத்